# சிவானந்தர் மொழியமுதகம்

ஸ்ரீ சுவாமி சிவானந்தா






இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# சிவானந்தர் மொழியமுதம்

தொகுத்தவர்கள் :

முதல் பாகம்

ஸ்ரீ சுவாமி குருசரணானந்தா

இரண்டாம் பாகம்

ஸ்ரீ சுவாமி வெங்கடேசானந்தா

தமிழாக்கம் :

'பேராசிரியர்' திரு. L. ஜானகிராமன், M. A.







வெளியிடுவோர்

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா.

விலை ] 1981 [ ரூ. 2-00

# முகவுரை

அளவு கடந்த தெய்வீக ஞானத்திற்கும், தெய்வீக அமைதிக்கும் தெய்வீக பேரானந்தத்திற்கும், முக்திக்கும் இருப்பிடமாகிய பரம்பொருளைப் போற்றி வணங்குகிறேன். நம் வாழ்க்கையின் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கங்கள். அவருடைய பேரருள் உங்கள் உலகியல் மற்றும் ஆன்மீக வாழ்க்கையில் முன்னேற்றமும், வளமும், வெற்றியும் வாரி வழங்கட்டும்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குரு மகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞான யக்ஞப் பணியில் இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முன்னணியில் இருக்கின்றது. திருவள்ளுவர், கம்பர், அறுபத்து மூன்று நாயன்மார், பன்னிரண்டு ஆழ்வார்கள், பட்டினத்தார், ஔவையார் ஆகிய புகழ்பெற்ற பெரியோர்கள் தோன்றிய புண்ணிய பூமியில் வசிக்கும் ஆன்மீக உள்ளம் படைத்த எண்ணற்ற மக்களுக்கு குருதேவரின் உணர்ச்சியூட்டக் கூடிய போதனைகளை வழங்குவதில் வெற்றி பெற்றுள்ளது. இராசிபுரம் சிவானந்த யோகாசிரமத்தில் இந்த ஞான யக்ஞப் பணி முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடைபெறுகிறது. அதனுல் தமிழ் நாட்டிலும், வெளி நாடுகளில் தமிழர்கள் வாழும் பகுதிகளிலும் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்கள் ஆகியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்டு, வாழ்வில் மறுமலர்ச்சியுண்டாக்கும் தார்மீகமும், ஆன்மீகமும் போதிக்கும்

நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புகள் இன்று இருக்கின்றன. இதற்கு யோகி சந்திரசேகரன் அவர்கள், அவருடைய ஆன்மீக சகோதரர்கள், நலம் நாடுபவர்கள், மற்றும் இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் இந்த நற்பணிக்கு உதவி செய்பவர்கள் ஆகியவர்களின் தளராத, மனப்பூர்வமான முயற்சிகள் தாம் காரணம். மொழிபெயர்ப்பாளர்கள், இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்பணிக்கு ஒத்துழைப்பும், தவறாத உதவியும், வியக்கத்தக்க முறையில் செய்துவரும் சேலம் லிட்டரரி பிரஸ் ஆகியவர்கள் ஒன்று சேர்ந்து செய்யும் இந்த இராசிபுரம் ஞான யக்ஞப் பணி அனைவரும் மெச்சத் தகுந்த முறையில் விளங்குவதோடு, பொது மக்களுக்கு நீதி நெறியிலும், ஆன்மீகத் துறையிலும் சிறப்பான முறையில் பயன்படும்படி மேன்மையான தொண்டாகவும் அமைந்துள்ளது. இந்த நூல்கள் ஆன்மீகப் பொக்கிஷமாகும். இந்தப் புனிதமான பணியைச் செய்வதற்கு மிகவும் சுறுசுறுப்போடு ஒன்றாகச் சேர்ந்து ஒருவருக்கொருவர் உதவி செய்த நல்ல ஆன்மாக்கள் அனைவருக்கும் இறைவன் பேரின்பத்தையும், பொருளையும் வாரி வழங்கவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

இவ்வாண்டுக்கான ஞான யக்ஞத் தொடரில் ''சிவானந்தர் மொழியமுதம்'' என்ற நூலை பேராசிரியர் திரு. L. ஜானகிராமன், M.A., அவர்கள் மிக அற்புதமாகத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

இந்த நூல் இவ்வுலக மக்களின் அன்றாட வாழ்க்கைக்கான நடைமுறைச் செயல் முறைகளுக்கு இன்றியமையாதவை ஆகும். எனவே இந்த நூல்

மிகவும் மதிப்புள்ளது. மக்களுக்கு அன்றாட வாழ்க்கையில் பற்பல துறைகளில் அதிக அளவு பயன்படும். இந்த நூலைப் பெரும்பாலான மக்கள் படித்துப் பயன் பெற வேண்டுமென விரும்புகிறேன். இந்தப் புனிதப் பணியில் ஈடுபட்டுள்ள அனைவருக்கும் இறைவன் தெய்வீக அருளைப் பொழிவாராக. இப்பணி தொடர்ந்து முன்னேற்றமும் வெற்றியும் பெற வாழ்த்துகிறேன். இந்த ஆன்மீகப் போதனைகளைப் படிப்பவர் அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழியவேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda
ௐ

சிவானந்தா ஆசிரமம்
முனி - கி - ரேதி
ரிஷிகேசம் - 24-4-81

# பொருளடக்கம்

## முதல் பாகம்



## இரண்டாம் பாகம்

# "சிவானந்தர் மொழியமுதம்"

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | பெயரும், விலாசமும் | | ரூபாய் |
|---|---|---|---|
| 1. | 'குருபக்தி ரத்ன' திரு. M. S. A. ஜெயராம் தலைவர்: தெய்வீக வாழ்க்கைச் சங்கம் & Prop: Jayaram Textiles, இராசிபுரம். | ... | 51 |
| 2. | திரு. T சேர்மபாண்டி, பூந்தமல்லி, சென்னை-56. | ... | 51 |
| 3. | திரு. Y. K. V. சந்தானம் செட்டியார் & திருமதி கிருஷ்ணவேணி, இராசிபுரம். | ... | 50 |
| 4. | திரு. C. கந்தசாமி, ஷராப் வியாபாரம், சேலம்-7. | ... | 50 |
| 5. | Sri. K. R. D. Swamy, Jamnagar, Gujarat. | ... | 50 |
| 6. | Sri. R. Athimulam, Seberang Perai, Malasiya. | ... | 200 |
| 7. | Sri. R. Padmanathan, Hony. Secretery, Divine Life Society, Johore Bahru, Malasiya. | ... | 200 |
| 8. | திரு. G. கல்யாணசுந்தரம், ரயில்வே காலனி, திருச்சி-4. | ... | 50 |
| 9. | Sri. K. Ananthasamy, Retd. Asst. Director, Govt. Sandalwood oil Factories, Karnataka, Bangalore. | ... | 101 |

| | | | |
|---|---|---|---|
| 10. | திரு. A. A. M. அய்யா நாடார் & சன்ஸ்,<br>மளிகை, தேனி, மதுரை மாவட்டம். | ... | 50 |
| 11. | 'சிவநெறிச் செல்வர்'<br>திரு. க. கனகராசா, J. P.<br>அதிபர்: மில்க் ஒயிட் சோப்,<br>யாழ்ப்பாணம், சிலோன். | ... | 100 |
| 12. | திரு. R. P. இராமசாமி செட்டியார்,<br>கைத்தறி ஜவுளி வியாபாரம், சேலம்-6. | ... | 50 |
| 13. | Sri. G. Naganathan, Manager,<br>State Bank of India, Thiruvannamalai. | ... | 50 |
| 14. | 'Vidwan' Sri. M. Ramasamy, M. A., B. Ed.,<br>Asst. H. M. Govt Higher Secondary School,<br>Rasipuram. | ... | 50 |
| 15. | 'கல்விக் கடல்' திரு. S. K. இராமராஜ்,<br>கம்பன் நிலையம்,<br>வேலூர், சேலம் மாவட்டம். | ... | 50 |
| 16. | திரு. T. S. சீனிவாசன், ஆசிரியர்,<br>கோவிந்த நகர்-626517. (மதுரை ஜில்லா) | ... | 51 |
| 17. | திரு. V. பாலகிருஷ்ணன், மேனேஜர்,<br>லக்ஷ்மி விலாஸ் பேங்க், சின்னதாராபுரம். | ... | 50 |
| 18 | திரு. S. பஞ்சநாதன்,<br>Retd. போஸ்ட் மாஸ்டர், ஈரோடு-4. | ... | 100 |
| 19. | திரு. D. பழனியப்பன் & பிரதர்ஸ்,<br>மிராஸ்தார், ஜலகண்டாபுரம், சேலம் Dt. | ... | 51 |
| 20. | திருமதி ராதாருக்மணி,<br>ஆழ்வார்பேட்டை, சென்னை-18. | ... | 50 |
| 21. | திரு. T. S. P. மனோகரன்,<br>10, பிடாரியார் கோவில் தெரு, சென்னை-1. | ... | 50 |



ஸ்ரீ சுவாமி சிவானந்தா



ஸ்ரீ சுவாமி சிதானந்தா

ஓம்

# சிவானந்தர் மொழியமுதம்

○ * ○

## 1—1—1957

ஸ்ரீ சுவாமி வெங்கடேசானந்தா, ஸ்ரீ சுவாமி விஷ்ணு தேவானந்தா இவர்களின் பிறந்த நாள் இன்று ஆசிரமத்தில் கொண்டாடப்பட்டது. இரவில் நடைபெற்ற சத்சங்கத்தில் இவ்விரண்டு தலை சிறந்த சீடர்களுக்கு, நல்வாழ்த்து கூறு முகமாக குருதேவர் அருளிய ஆசி மொழிகள் :— இன்று சுவாமி வெங்கடேசானந்தா, சுவாமி விஷ்ணு தேவானந்தா இவர்களின் பிறந்த நாள். சுவாமி வெங்கடேசானந்தா எனது இடக்கரமாக வும், வலக்கரமாகவும், அறிவாகவும், இதயமாகவும் ஒருங்கே திகழ்கிறார். அவர் ஒரு மாமேதை. நீங்கள் அவரை மாமேதையாக அங்கீகரித்தாலும், அங்கீகரிக்காவிட்டாலும், நான் அவரை மாமேதை யென அங்கீகரிக்கிறேன். ''ஒருங்கிணைந்த யோகம்'' முதலிய புத்தகங்களை அவர் எழுதியுள்ளார். 'யோக வேதாந்த வன பல்கலைக்கழக வார இதழின்'' ஆசிரியர் அவரே. ஆசிரமத்தின் அனைத்து வேலைகளும் பெரும்பாலும் அவரால் நடத்தப் படுகின்றன. அவர் ஆசிரமத்தை நிர்வகிக்கிறார். அச்சகத்தை இயக்குகிறார். எனவே, அவர் எனது வலக்கரம், இடக்கரம், அறிவு, இதயம் எல்லா மாகிறார்.

சுவாமி விஷ்ணு தேவானந்தா ஹடயோக வல்லுநர். ஹடயோகத்தில் அவரை மிக்காரில்லை யெனத் திகழ்கிறார். அநேக ஐரோப்பியர்களுக்கு அவர் ஹடயோகப் பயிற்சி அளித்திருக்கிறார்.

இந்தியா முழுவதும் ஹடயோகத்தைப் பற்றி பிரசங்கங்கள் செய்து, சுற்றுப் பயணம் செய்திருக்கிருர். இந்த பிரசங்கங்கள் ''விஷ்ணு தேவானந்தாவின் சொற்பொழிவுகள்'' என நூல் வடிவில் வெளியிடப்பட்டிருக்கிறது. அவர் ஒரு முதல் தரமான பொறியாளர். ரெங்கநாதானந்தாவினுல் வேலேப் பளுவைத் தாங்க முடியாமல் போன பொழுது ஆசிரமப் பொறியாளராக அவர் பணியாற்றினுர். சமையலறையையும் அவர் சிறப்பாக நிர்வகிக்கிருர். அவர் சமையற்காரர்களேயும், கொத்தனுர்களேயும், வேலேயாட்களேயும் செவ்வனே நெறிபடுத்துகிருர். அவரிடம் என்ன மாயாஜாலம் இருக்கிறதென்பதை நானறியேன். ஒரு வேளே அவர் வேலேயாட்களே வைது விரட்டுவார் போலும்! இந்த மண்டபம் (கண் சிகிச்சை மண்டபம்) அவரால் கட்டப்பட்டது. பார்வதி குடில், சிவானந்தா மந்திர் இவற்றைக் கட்டியவரும் அவரே. மேலும் சாதனு குடிலின் மேல்மாடிக் கட்டிடத்தை அமைத்ததும் அவரே. ஆசிரமத்திற்கு மிக மோசமான பணமுடை இருந்த காலத்தில் இத்தனே கட்டடங்களேயும் எப்படியோ அவர் கட்டி முடித்தார். அவர் வேலே வாங்குவதில் மிக்கதிறன் படைத்தவர். கொத்தனுர்களும் கல்தச்சர்களும் கூலி கேட்டால் ''நாளே வாருங்கள்'' எனக் கூறிவிடுவார். பணமே இல்லாமல், இருபதாயிரம் ரூபாய் பெறுமான இந்த பார்வதி குடிலே அவர் கட்டி முடித்தார். பிரெஞ்சுக்காரர்கள் அவரை அழைத்திருக்கிருர்கள். ஆசனங்கள் பற்றிய அவருடைய புஸ்தகம் நல்ல முறையில் வெளியிடப்பட்டிருக்கிறது. இந்தோனேஷியா, சிலோன், மலேயா, பிரான்ஸ், ஜெர்மனி, அமெரிக்கா முதலிய தேசங்களுக்கு அவர் யாத்திரை மேற்கொள்ளவிருக்கிருர். அங்கெல்லாம் அவர் ஓர் எழுச்சியை ஏற்படுத்தவிருக்கிருர். ஹடயோகத்தைக் கற்பிப்பதில் அவர்

தலைசிறந்த ஆசான். அவருக்கு ஈடானவர் இலர். ஹடயோகத்தில் எல்லா கிரியைகளையும் அவர் அறிவார். ஆயிரக்கணக்கானவர்களுக்கு அவர் போதித்திருக்கிறார். எல்லோரும் அவரை நேசிக்கிறார்கள். காசி பல்கலைக்கழக மாணவர்கள் அவரிடம் மிகவும் அன்பு பாராட்டுகிறார்கள். அவர் தன்னலமற்றவராயும், கோபமற்றவராயும் விளங்குகிறார். சில நேரங்களில், சமையல் செய்வோர் அவரைக்கண்டு அஞ்சும்படி நடந்து கொள்கிறார். அவர்கள் அவரைக்கண்டு பயப்படுகிறார்கள். கொத்தனார்களும் அவரைக்கண்டு அஞ்சுகின்றனர். அவர் ஒரு நல்ல மனிதர். அவருடைய யாத்திரையில் அவருக்கு முழு வெற்றிகிட்ட நாம் வாழ்த்துகிறோம். இது ஓர் உலக யாத்திரையாக அமைகிறது. ஐரோப்பா, அமெரிக்கா மட்டுமின்றி, உலக முழுவதும் அவர் செல்ல இருக்கிறார். அமெரிக்காவில் அவருடைய சீடர்கள் ராதாவும், சுசீலாவுமுளர். என்னைவிட அவருக்குச் சீடர்கள் அதிகம். அதைப்பற்றி நான் பெருமைப்படுகிறேன்.

சுவாமி வெங்கடேசானந்தாவிற்கும், சுவாமி விஷ்ணுதேவானந்தாவிற்கும், ஆரோக்கியம், நீண்ட ஆயுள், சாந்தி, ஆனந்தம், ஐஸ்வர்யம், அமரத்துவம் ஆகியவற்றை அளித்து, ஆண்டவன் அருள்பாலிக்கட்டும்.

சுவாமி வெங்கடேசானந்தாவும், சுவாமி விஷ்ணுதேவானந்தாவும் பல்லாண்டு வாழ்க!! என மும்முறை கோஷமிட்ட சுவாமிஜி, ''அனைத்துலகும் பல்லாண்டு வாழ்க!! என்று முழங்கி விழாவை நிறைவு செய்தார்.

## 8-1-1957 டாக்டர் பத்மா முதோல்கருக்கு சுவாமிஜியின் பாராட்டுரை :

ஆசிரமத்தில் 19-12-1956ல் தொடங்கிய, மகளிர் குழந்தைகளுக்கான வைத்திய உதவி முகாம் நிறைவு பெற்று, அதை நடத்திய டாக்டர் பத்மா முதோல்கர் அவர்கள் நாளை ஊருக்குத் திரும்பு வதை முன்னிட்டு, இன்று நடந்த சத்சங்கத்தில், டாக்டர் அவர்கள் ஆசிரமத்திற்கு ஆற்றிய அரும் பணிக்குத் தகுந்த மரியாதை செய்யப்பட்டது. அச்சிட்டு, சட்டமிடப்பட்ட பாராட்டுரை வாசிக்கப்பட்டது. அதை சுவாமிஜி தன் திருக்கரத்தால் டாக்டருக்கு அளித்தார். பாராட்டுரையை வழங்குமுன், டாக்டருக்கும், அவருடைய மகள் குமாரி அருணுவிற்கும் மாலை அணிவித்து, ''ஸ்திரீ சிகிச்சா சிரோன்மணி'' என்ற பட்டத்தை டாக்டர் பத்மாவிற்கும், ''சேவா ரத்ன'' ''சங்கீத ஜோதி'' என்ற பட்டங்களை குமாரி அருணுவிற்கும் வழங்கி, சுவாமிஜி, அவர்களைக் கௌரவித்தார். சுவாமிஜியின் பாராட்டுரைக்குப் பின், உரையாற்றிய சுவாமி சிதானந்தாஜி, டாக்டரிடம் உறையும் நற்பண்பு களாகிய கடமையில் ஈடுபாடு, சுவாமிஜியிடம் தனிப்பட்ட பக்தி, தன்னால் முடிந்தவரை பிறருடன் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்ற நல்ல அவா, இவற்றைத் தெள்ளத் தெளிவுபடுத்தினார். டாக்டர் பத்மா முதோல்கரைப் பாராட்டி பல்வேறு மொழிகளில், ஆசிரமவாசிகளால் இயற்றிய பாடல்கள் பாடப் பெற்றன. முடிவில், ''திருமதி பத்மா முதோல்கருக்கும், செல்வி அருணு விற்கும், ஆரோக்கியம், ஆயுள், சாந்தி, ஆனந்தம், ஐஸ்வரியம், அமரத்துவம் இவற்றை ஆண்டவன் நல்கி ஆசீர்வதிக்கட்டும்'' எனப் பொருள்பட சுவாமிஜி பாடினார். ''டாக்டர் பத்மாவும்,

அருளுவும் நீடூழி வாழ்க! ''பல பத்மாக்களும், அநேகம் அருளுக்களும் தேவை'' என முழக்கமிட்டு விழாவை நிறைவு செய்தார்.

சுவாமிஜி நிகழ்த்திய சொற்பெழிவு :—

ரிஷிகேசத்திலும், அருகிலுமுள்ள பகுதியில் உள்ள பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் மகத்தான சிறந்த சேவை செய்ய, டாக்டர் பத்மா அவர்கள் நாக்பூரிலிருந்தல்ல, விண்ணிலிருந்தே ஓசைப்படாமல் ஓர் தேவதை வந்திறங்கியது போல் வருகை தந்தார். ஆயிரக்கணக்கானவர் பயனடைந்தனர். மகளிர் துன்பங்களை மௌன மாகவே அனுபவிப்பர்; எனவே அவர்கள் துயர் துடைக்க வந்த டாக்டர் பத்மா அவர்களும், மௌனமாகவே வந்தார். மிகச்சிறந்த மாதர் யக்ஞம் என்ற பெரும் யக்ஞம் அவரால் நடத்தப் பெற்றது.

அசுவமேத யாகம்கூட இவ்வளவு கடினமல்ல, ஆனால், இந்த யக்ஞம் மிகக் கடுமையானது. இரண சிகிச்சையில் அளப்பரிய அநுபவம் வாய்ந்த மருத்துவரின் நுட்பமான செயலாற்றும் திறமை இதற்கு வேண்டும். எனவே இது அசுவமேத யாகத்தைவிட மகத்தானதாக அமைகிறது. டாக்டர் பத்மா அவர்கள், முழுமனதுடன், திறமை யுடன், உற்சாகத்துடன், பாவத்துடன், நாள் முழுவதும் சேவையில் மூழ்கி இருந்த பாங்கு என்னே! சேவையின்போது அவர் தன்னையே மறந்துவிட்டார். அவருக்கு நாம் ஒரு வசதியும் செய்து கொடுக்கவில்லை. அவர் தங்குவதற்கு அளிக்கப்பட்ட குளிரும், ஈரமுமுள்ள அறையில், ஒரு திரைகூட இல்லை. செல்லம்மா சொன்னபிறகே திரைபோடப்பட்டது. அறையின் பாதிப்பகுதிகூட

இல்லை. கால் பாகமே அவருக்கென ஒதுக்கப் பட்டது. மிகக் காரமான உணவை அவருக்கு அளித்தோம். காரமான உணவே அவருக்குப் பிடிக்குமென நான் நினைத்தேன். அவர், செய்யும் தொழிலில், ஆர்வமும், அக்கறையும், ஜாக்கிரதை யும், தளரா ஊக்கமும் கொண்டவர். அவர் ஏதோ மூன்றும் அல்லது நான்காம் ஆண்டு படிக்கும் கல்லூரி மாணவிபோன்று தோன்றுகிருர். ஆனுல், அவர் சிறந்த அறிவாளி. லண்டன் மாநகரில் மருத்துவம் பயின்றவர். அங்கேயே ஏழெட்டு ஆண்டுகள் வசித்தவர். L. R. C. P., M. R. C. O. G. முதலிய பட்டங்களைப் பெற்றவர். அவர் ''மகப் பேறும் மகளிர் நோயும்'' பிரிவில் மிக உயர்ந்த பட்டங்களைப் பெற்றிருக்கிருர். M. R. C. O. G. பட்டம் பெற்ற பலர் நம்மிடையே உளர். ஆனுல், டாக்டர் பத்மாபோன்று, திறமையும், சிறந்த அனுபவமும், பாவமும், கர்மயோகப் பாங்கும், மக்களுக்கு சேவை செய்ய வேண்டுமென்ற தன்னல மற்ற மனப்பான்மையும் கொண்டவர் இலர். ''எனது தாய் காலமாகி விட்டார். எனவே எனது தாய்மார்களாக விளங்கும் அனைத்து மகளிருக்கும், சேவை செய்ய உறுதி பூண்டிருக்கிறேன்'' என அவரே என்னிடம் சொல்லியிருக்கிருர். தான் ஒரு மருத்துவராக சேவை செய்ய வேண்டுமென்ற தெய்வீக ஆவல் அவரை ஆட்கொண்டுள்ளது. அவர் தளராத ஊக்கமும், கவனமும் கொண்ட புத்திசாலி மாணவி. நாக்பூரிலுள்ள டாகா நினைவு மருத்துவமனையில் கண்காணிப்பாளராக பணியாற்றும் அவர்கள், அந்த மருத்துவமனையின் நிர்வாகத் தலைவியாவார். அந்த மருத்துவமனை யில், எல்லாத் துறைகளும், எல்லாத் திறமைகளும் உள்ளன. ''வயிற்றைக் கீறி குழந்தையை எடுக்கும் சிஸேரியன் அறுவைச் சிகிச்சை எத்தனை செய் திருக்கிறீர்கள்?'' என நான் வினவியபொழுது,

''சுமார் ஓர் இருநூறு இருக்கும்'' என அவர் விடையளித்தார். நம்மிடையே பல அவதார புருஷர்கள் உளர். சாதாரண மனிதனுல் செய்ய முடியாத இந்தப்பணி ஓர் அவதாரத்தின் செயல். நமது பார்வதி மகராஜ் மிக நன்ருக வீணை வாசிக் கிருர். 40 ஆண்டுகளாக இசைத் துறையில் ஈடுபட்டிருக்கிருர். இவர்களெல்லாம் அவதார புருஷர்கள். அதுபோன்று மருத்துவத்துறையில் டாக்டர் பத்மா ஓர் அவதாரம். இல்லையெனில் இத்தனை நிபுணராக விளங்கமுடியாது. பத்து நிமிடங்களில் அவர் சிகிச்சைக்காக வயிற்றைத் திறந்து விடுவார். பத்மாவின் பணி மகத்தானது. ரண சிகிச்சைக்காக, கத்தியைத் தொடும்முன், அவர் ஆண்டவனை வழுத்துவதினுல், இறைவனின் சக்தி அவர் கைமூலமும், விரல்கள் மூலமும் பாய் கின்றது. குழந்தையை எடுக்க வயிற்றைக் கீறுவது, அவ்வளவு எளிதன்று. ''பிரம்மமே சத்தியம், உலகம் மாயை'' எனும் வேதாந்திகள்கூட இந்த சிகிச்சையைப் பார்த்தால் மயங்கிவிடுவர்.

டாக்டர் தேவகிக்குட்டியும் இதேபோன்று திறமை வாய்ந்தவர். செல்லா, தேவகிக்குட்டி, பத்மா இவர்களைத் தனித்தனியே யானைமீதேற்றி, ''செல்லாவிற்கு ஜெய்! தேவகிக்குட்டிக்கு ஜெய்! பத்மாவிற்கு ஜெய்! என்று சங்கநாதம் செய்து மரியாதை செய்ய வேண்டுமென்று நான் இங்குள்ள வர்களிடம் சொல்வதுண்டு. இவர்கள் அவதாரங் கள். சாதாரண மனிதர்களால் இது போன்று பணிகளைச் செய்யமுடியாது. ஒரு சிறிய கட்டியைக் கூட சிலரால் கீற முடியாது. இவர்கள் தோன்றி யிருப்பது, இறைவனை பலஜன்மங்களில் பூஜித்ததின் பலனே! இவர்கள் தியானமோ, பூஜையோ செய்ய வேண்டியதில்லை. அவர்கள் செய்யும் சேவையே போதுமானது. கண்களை மூடிக்கொண்டால்,

இருட்டையும், சூன்யத்தையும் காண்கிறீர்கள். உடனே அங்கே பிரம்மா தோன்றுகிறது. பத்து நிமிடங்கழித்து, தூக்கம் வந்து குறட்டை ஆரம்ப மாகிறது. மன ஒருமைப்பாட்டிற்கு உட்காரும் பொழுது, நீங்கள் பணத்தைப் பற்றியும், தேநீர் பற்றியும் நினைக்கிறீர்கள். எழுமின்! நோயுற்ருேர் பிணி தீர்க்கும் ''சேவை யோகம்'' செய்மின்! இந்த ''அவதாரங்கள்'' சேவை யோகத்தில் முழுமை பெற்றவர்கள்.

சில காலமாக, டாக்டர் பத்மாவின் சிந்தனை களில் சில மாற்றங்கள் தோன்றியுள்ளன. மிக உயர்ந்த பொருள் நோக்கி அவர் உள்ளம் திரும்பு யுள்ளது. நித்தியமான பொருளாகிய, ஆன்மீக ஒளியை அடைய அவர் விழைகிருர். எனவே, அந்தர்முக ஆன்மீக வாழ்வைப்பெற அவர், புஸ்தகங்கள் படிக்கவும், இன்னும் கொஞ்சம் விரக்தியைக் கடைப்பிடிக்கவும், சூக்ஷ்மத்தை உணரவும், துறவு கொள்ளவும், உலகாயத விஷயங்களிலிருந்து விலகி இருக்கவும் விரும்புகிருர். இங்கேயே நிரந்தரமாகத் தங்க விரும்புகிருர். ஆண்டவன் அருளால் அவர் விருப்பங்கள் நிறைவேறும்.

டாக்டர் பத்மாவின் மகள், மருத்துவ மாணவி அருணு இரக்க சித்தமும், சேவை உள்ளமும் கொண்டவர். இவை அவளின் பிறவிக் குணங்கள். தாய் போல் சேய். ஆண்டவர் அவர்களுக்கு நீண்ட ஆயுளையும், ஆரோக்கியத்தையும் அருள் வாராக. அவர்கள் விருப்பங்கள் நிறைவேறுவதாக. பூரண உள்ளொளி பெற்று அவர்கள் விளங்கட்டும். அருணு என்ருல் கதிரவன். அதாவது பேரொளி. பத்மா என்ருல், தாமரை, லக்ஷ்மி, ஐஸ்வர்ய தேவதை. அவர்கள் தெய்வ சாக்ஷாத்காரம்

பெற்று, தங்கள் சரீரங்களை, நர சேவைக்குப் பயன் படுத்தட்டும். ''நாவில் ராம நாமம். கையில் பயன் கருதா சேவை'' என்பது கோட்பாடு.

டாக்டர் பத்மாஜி! ஒவ்வொரு ஆண்டும் வந்து இந்த யக்ஞத்தை மீண்டும் மீண்டும் தொடர வேண்டுகிறோம். ரிஷிகேச மக்கள் தங்களை என்றென்றும் நினைவில் வைத்துக்கொள்வர், அவர்கள் உங்கள் தரிசனத்திற்காக ஏங்குகின்றனர். அருணு விடுமுறையில் எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம். அவள் நலனை நான் கவனித்துக் கொள்கிறேன். அவள் இந்த இடத்தை மிகவும் விரும்புகிறாள். அறிவாற்றல், படிப்பு, பாட்டு, நல்ல அனுபவங்கள் இவற்றை இங்கு வருகின்ற பொழுது அவள் பெறலாம். இதுதான் எனது சிறிய பிரார்த்தனை.

அமெரிக்கா சென்று வைடமின் முதலியவற்றைப் பற்றி, பத்மா ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். அவர்கள் சென்றது போல் அமெரிக்கா, லண்டன் முதலிய இடங்களுக்குச் செல்ல நூறாண்டு வாழ்ந்தாலும் முடியாது. அவர் லக்ஷ்மியின் அவதாரம். அவர் ஒரு நூல் எழுத வேண்டும். எல்லாத் தாய்மார்களுக்கும் உறுதுணையாக அது அமையும். அனைத்துத் தாய்மார்களுக்கும், மணப் பெண்களுக்கும் நாம் அதை அன்பளிப்பாக வழங்குவோம்.

## 4—1—1957 ஸ்ரீவான் கனீப் ஸ்ரீமதி தியோடோர் இவர்களுக்கு சுவாமிஜி வழங்கிய ஆசியுரை:-

இந்தோனேஷியா தேசத்தைச் சேர்ந்த ஸ்ரீவான் கனீப், ஸ்ரீமதி தியோடோர் என்ற, மிகுந்த ஈடுபா

டுடைய, இரு பக்தர்கள் சுவாமிஜியிடம் சிலவாரங்கள் ஆசிரமத்தில் தங்கியிருந்தபின் தாயகம் திரும்ப இருக்கிறார்கள். ஸ்ரீவான் கனீப், இந்தோனேஷியர்களுக்கு ஆன்மீக சிகிச்சையளித்து வருகிறார். ஆசிரமத்தில் தங்கியிருந்த நாட்களில் தினந்தோறும் தான் இந்தோனேஷியாவிலிருந்து கொண்டு வந்திருந்த ஒரு தைலத்தை உபயோகித்து, வலி கண்டிருந்த சுவாமிஜியின் முழங்காலுக்கு சிகிச்சையளித்து வந்தார். சுவாமிஜியை தினந்தோறும் வணங்கும் பொழுது, சுவாமிஜியின் பாத தாமரைகளைத் தன் தலைமேல் வைத்துக்கொள்வார். ஸ்ரீமதி தியோடோரும் அது போன்று ஆழ்ந்த பக்தியுள்ளவர். நாளை சுவாமிஜியை விட்டுப் பிரியப் போகிறோமே என்ற எண்ணத்தினால் வழக்கம்போல் இன்று மாலை சுவாமிஜியை தரிசனம் செய்துவிட்டு வணங்கி விடைபெறும் பொழுது, ஸ்ரீமதி தியோடோர் வாய்விட்டு அழுததைக் கண்டோம். சத்சங்கத்தில் சுவாமிஜி அவர்கள் இருவரையும் பாராட்டு முகமாகக் கூறிய சில வார்த்தைகள்:

''நம்முடைய ஸ்ரீவான் கனீப் (சிவானந்த அன்டிரியோ) ஸ்ரீமதி தியோடோர் (சிவானந்த தியோடோர்) ஜாகர்த்தாவிலிருந்து இங்கு வந்து ஒருமாத காலம் தவநெறியில் வாழ்ந்தார்கள். புகழ்படைத்த இமயமும் புனித கங்கையும் அனைத்துலக மக்களையும் தங்கள்பால் ஈர்க்கின்றன. இது ரிஷிகள் வாழ்ந்த இடமாதலால் அமெரிக்கா ஐரோப்பாவிலிருந்தெல்லாம் மக்கள் இங்கு வருகின்றனர். ரிஷிகளினால் ஏற்படுத்தப்பட்ட ஆன்மீக அலைகள், அதிர்வுகள், இங்கு இப்பொழுதும் வியாபித்திருக்கின்றன. இந்த இரு பக்தர்களும் ஒருமாதம் இங்கு தவவாழ்வு வாழ்ந்தனர். இவர்களிருவரும் பணிவு, அன்பு, இரக்கம், வள்ளன்மை, ஈகை, ஊக்கம், வீடுபெற வேண்டு

மென்ற விழைவு, அமரத்துவம் அடையவேண்டு மென்ற ஆவல், உயர்ந்த தலையாய தத்துவத்தை அறியவேண்டுமென்ற அவா கொண்ட பரம பக்தி மான்கள். இவர்கள் தியானம் செய்தனர். வகுப்பு களில் கலந்து கொண்டார்கள். ஸ்ரீவான் கனீப் அவர்கள் 'கிறிஸ்துமஸ் செய்தி' 'புத்தாண்டுச் செய்தி' போன்ற சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர். நாளை இவர்கள் இங்கிருந்து டெல்லி சென்று அங்கிருந்து ஜாகர்த்தா செல்ல விருக்கிருர்கள்.

ஸ்ரீவான் அவர்கள் ஜாகர்த்தாவில், சில தன்னலமற்ற சேவைகளைச் செய்து வருகிருர். காலை நேரங்களில் தன் தொழிலைக் கவனிக்கிருர். ஒரு நாளில் பாதி நேரத்தை, உளவியல் சிகிச்சை நோய் நீக்கும் சிகிச்சை முதலிய சமுதாய சேவை களில் பயனுடன் செலவழிக்கிருர். எனக்குக் கூட அவர் சிகிச்சை செய்தார். நான் மிக்க பயனடைந் தேன். அவரது அன்பான இதயம், பரிவு, ஆன்மீக அலைகள் எனக்கு நல்ல பலனைக் கொடுத்துள்ளன. ஜாகர்த்தா சென்றவுடன் அவர் சிரத்தை கொண்ட சிலருடன் சேர்ந்து ஒரு நதிக்கரையில் அழகான ஆசிரமம் ஒன்று அமைக்க இருக்கிருர்கள். அவர் களில் ஒருபகுதியினர் யோகாசனம், தியானம் இவற்றைப் பயில்வர், மற்ற பகுதியினர் சேவை, துயர் துடைத்தல் முதலிய சமூகப் பணியிலும் ஈடு படுவர். அவர் கருணையுள்ளம் படைத்தவர். எனவே ஆயிரக்கணக்கானவரை அவர் சொஸ்தப் படுத்த முடியும். தன்னலம், லாப நோக்கு, பணத் தாசை இவை பயனுள்ள விளைவுகளைத் தோற்று விக்கவே முடியாது. ஆனுல் ஒருவன் ஆத்மசுத்திக் காக, மக்களுக்கு சேவைசெய்து உலகவாழ்க்கையின் இலக்கை அடைவதற்கு விழைவானேயானுல் அவனுல் சமுதாயத்திற்கு பெரும் நலம் செய்ய முடியும். இதற்கு ஸ்ரீவான் ஓர் உதாரணம். ஒரு

நாளில் பாதிப்பகுதியை சிறிது சம்பாதிப்பதற்கு இப்பொழுது ஒதுக்குவதையும், சில காலத்திற்குப் பிறகு நிறுத்திவிட்டு தன் முழு நேரத்தையும் தன்னலமற்ற சேவை, படிப்பு, யோகப்பயிற்சி இவற்றில் செலவழிக்கவிருக்கிறார். அவருடைய துணைவி தியோடோர், சிறந்த சீரிய பக்தை இருவரும் பக்தர்கள். பலமான அனுபவங்கள், ஆன்மீக யோக அனுபவங்கள், அவர்களுக்கு வாய்த்திருக்கின்றன. நெடுங்காலமாக அவர்கள் யோகம் பயில்கிறார்கள். நான் அவர்கள் வெற்றிபெற வாழ்த்துகிறேன். அவர்கள் மகத்தான முன்னேற்ற மடையட்டும். அவர்கள் ஆசிரமம் யோகத்திற்கும் ஆன்மீகத்திற்கும் ஓர் ஆற்றல் மையமாக விளங்கட்டும். அவர்களுக்கு உள்ளொளியும் நிலையான ஆனந்தமும் அமரத்வமும் கிடைக்கட்டும். ஆசிரமம் பேருடனும் புகழுடனும் விளங்கட்டும். ஏற்கனவே இந்தோனேஷியாவில் ஜெனரல் சுகர்டோவும், மற்றும் பலரும் ஆன்மீக அறிவைப் பரப்பக் கடும் முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் பத்திரிகை நடத்துகிறார்கள். ''ஓய்வில்லாதவர்களுக்கு கீதை'' என்ற புத்தகம் அவர்களால் சமீபத்தில் இந்தோனேஷியா மொழியில் வெளியிடப்பட்டிருக்கிறது. இந்துமத தத்துவ சிந்தனை, யோகம், வேதாந்தம், தியானப் பயிற்சி இவற்றின்பால் ஈர்க்கப்பட்ட இந்தோனேஷியக் குழுக்கள் பல இருக்கின்றன. அங்குள்ள நல்ல ஆத்மாக்கள் ஒன்று சேர்ந்து, நல்லெண்ணம், ஒற்றுமை, சகோதரத்துவம், தன்னைத் தானே அறிந்துகொள்ளுதல் முதலியன வாழ்க்கையின் குறிக்கோள் எனும் செய்தியைப் பரப்புவார்கள்.

எனவே அவர்கள் யாத்திரை நலமுற அமைய நாம் வாழ்த்துகிறோம். இங்கு வந்து ஓரிரண்டு மாதங்கள் தங்கும்படி அவர்களை ஏற்கெனவே

கேட்டுக்கொண்டுள்ளேன். இது அவர்கள் இல்லம். இது அமைதியின் இருப்பிடம். இங்கு வந்து, இமயமலைச் சாரலிலும், கங்கைக் கரையிலும் அவர்கள் தியானம் செய்யட்டும். ஏற்கனவே அவர்கள் செய்து கொண்டிருப்பது போன்று, ஆத்ம பாவத்துடன் சேவை செய்ய இந்தோனேஷியாவில் இன்னும் பல கேந்திரங்களை அமைக்கட்டும். அவர்களுக்கு அமரத்துவம் கிட்டுவதாக.

சுவாமிஜியின் உரைக்குப்பின் திருமதி தியோடோர் எழுந்து கூறியதாவது :

''நாங்கள் உங்களிடையே கழிக்கும் கடைசி இரவு இதுதான். சுவாமிஜி அவர்களுக்கும், மற்ற சுவாமிகளுக்கும் அவர்கள் அளித்த விருந்தோம்பலுக்கும் பிரசங்கங்களுக்கும், இசைக்கும், பாடல்களுக்கும் மிக்க நன்றி உடையவர்களாக இருக்கிறோம் எனக் கூற விரும்புகிறேன். இங்கே அருமையாகக் கொண்டாடப்பட்ட கிறிஸ்துமஸ் பண்டிகைக்கு முன்தினவிழாவிற்கு நான் உங்களுக்கு மீண்டும் நன்றி கூறுகிறேன். அந்தக் கொண்டாட்டங்கள் நாங்கள் மறக்க முடியாதவை.

நாம் உடலால் பிரிந்திருந்தாலும் உள்ளத்தால் ஒன்றுபட்டிருப்பதால் உங்களிடம் விடைபெற்றுக் கொள்ளப் போவதில்லை. தங்களை மனித சமுதாயத்தின் வருங்கால நன்மைக்காக பலபல ஆண்டுகள் இவ்வுலகில் வாழ ஆண்டவன் நிரந்தரமான ஆசீர்வாதம் அருள்வாராக. சாஸ்வதமான சாந்தி தங்களுக்கு யாண்டும் கிடைக்கட்டும். அடுத்து ஸ்ரீவான் கனீப் சுவாமிஜிக்கும் மற்றோருக்கும் நன்றி தெரிவித்துக் கூறியதாவது.

''உங்களுடைய பெருந்தன்மைக்கும், அன்புக்கும் இனிமையான உபசரிப்புக்கும் எங்கள் இருவருடைய இதய பூர்வமான நன்றியை நானும்

தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். நாங்கள் உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளோம். இங்கு நாங்கள் பலவிஷயங்களைக் கண்டோம். பலவற்றைக் கற்றுக் கொண்டோம். எல்லோருடைய அன்புக்கும் நாங்கள் பாத்திரமானோம். நாங்கள் அதற்கு நன்றி உடையவர்களாக இருக்கிறோம். எங்களைத் தாயின் பரிவோடு கவனித்துக் கொண்ட சுவாமி நிர்மலானந் தாவிற்கு விசேஷ நன்றி கூற நான் மறக்கக் கூடாது. எங்களுக்கு அவருடைய அன்பைத் தந்ததோடு மட்டுமல்லாமல், தன்னால் கொடுக்க முடிந்ததை யெல்லாம் அன்பு கலந்து கொடுத்தார். இது எங்கள் இதயத்தை ஆழமாக ஊடுருவி இருக்கிறது. சுவாமி நிர்மலானந்தா அவர்களே! உங்கள் அன்புக்கு நன்றி.

''உண்மையான யோகி இவ்வுலகில் நிர்வாண மாக உலாவுகிறான்'' என்ற ஒரு கோட்பாட்டைத் தான் ஒரு கனவில் கேட்டதாகக் கூறிய ஸ்ரீவான் கனீப் நிர்வாணமாக உலவுதல் என்பது மனத்தின் பற்றற்ற தன்மையுடன் செயலாற்றுவதைக் குறிக் கிறதேயன்றி, ஆடையற்ற தேகத்துடன் அலைவதை அல்ல என்று விளக்கினார்.

''சுவாமிஜி அவர்களே! நீங்கள் எங்களிடம் காட்டிய அன்பிற்கெல்லாம் நன்றி'' என்று கூறி முடித்தார்.

## 15—1—1957 மனத்தை ஒருமுகப் படுத்துவற்கு அறிவுரை:-

*ஸ்ரீ கிருஷ்ணலால்:-* மனத்தை ஒரே பொருளில் ஒருமுகப்படுத்த எளிய வழி என்ன?

*சுவாமிஜி:-* ஜபம் செய்யுங்கள். பகவான் கிருஷ்ணனின் படத்தை உங்கள் முன் வைத்துக் கொள்ளுங்கள். அவர் திருப்பாதத்தின்மேல்,

பீதாம்பரத்தின்மேல், புல்லாங்குழல்மேல் சிந்தனையைச் செலுத்துங்கள்.

''நான் உடல் இல்லை என்று எப்படி அறிவது?''

சுவாமிஜி பதில் அளிக்கிறார். ''இது வித்தியாசமான தியானம். இதையும் மனத்தை ஒருமைப்படுத்தும் தியானத்தையும் குழப்பக்கூடாது.''

சிறிது நேரத்திற்குப்பின் சுவாமிஜி கேட்டார். ''கனவில் உடல் உணர்வு இருக்கிறதா?''

ஸ்ரீ கிருஷ்ணலால் ''இல்லை'' என்று பதில் சொன்னார்.

சுவாமிஜி :- எனவே நீங்கள் உடலினின்றும் வேறுபட்டவர். ஆழ்ந்த உறக்கத்தில் உள்ளம் இருக்கிறதா?

ஸ்ரீ கிருஷ்ணலால் :- இல்லை.

சுவாமிஜி :- எனவே நீ உள்ளமில்லை. ஆகவே நீ ஆத்மா. நீ ஆத்மா என்பதை எண்ணிப்பார். நீ ஆத்மா என்பதை உணர்ந்துகொள்.

''பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக்க உதவும் சிறந்த ஆசனம் எது?'' என ஸ்ரீ கிருஷ்ணலால் வினவ, சுவாமிஜி ''சிரசாசனமும், சர்வாங்காசனமும்'' எனப் பகர்ந்தார்.

## 19—1—1957 அமரர் சுவாமி தபோவன் மஹராஜ் நினைவாக சங்கீர்த்தனை :-

இன்றைய சத்சங்கத்தில், சமீபத்தில் அமரரான உத்ரகாசியைச் சேர்ந்த சுவாமி தபோவன்ஜி மஹராஜ் நினைவாக கூட்டுப்பாடல் நிகழ்ச்சியை சுவாமிஜி நடத்தினார். பாடல் நிகழ்ச்சிக்குமுன், சுவாமிஜி அமரர் தபோவன் மஹராஜ் அவர்களைப் பாராட்டி அருளியது :-

உத்ரகாசியைச் சேர்ந்த சுவாமி தபோவன்ஜி மஹராஜ் மஹா சமாதியடைந்து விட்டார்கள்.

அவருக்காக நாம் நாம ஜெபம் செய்வோமாக. அவர் இமயத்தின் கலங்கரை விளக்கமாகவும், ஞான மார்க்கத்திற்கு ஒளி காட்டியாகவும், இமயத்தின் ஜோதியாகவும் விளங்கினுர். அவர் பாலக்காட்டிற்கு அருகிலுள்ள ஓர் ஊரில் தோன்றியவர். அவர் சிறந்த கல்விமானும் பண்டிதருமாவார். பக்தியையும், ஞானத்தையும் அனுபூதியாகப் பெற்றவர். பிரம்ம ஞானியாக, இமய ஜோதியாக அவர் விளங்கினுர். கடந்த 32 ஆண்டுகளாக அவர் உத்திர கண்டத்தில் இருந்தார். நாங்கள் இருவரும் சம காலத்தவர்கள். நாங்கள் காளி கம்பிளி வாலா க்ஷேத்திரத்திற்கு பிக்ஷைக்காகப் போவதுண்டு. அவருடைய முந்திய பெயர் சுவாமி தியாகானந்தா என்பது. கைலாச ஆசிரமத்தில் அவர் சந்யாசம் பெற்ருர். அவர் பல மாணவர்களுக்கு ஸமஸ்கிருதமும், உபநிஷத்தும் கற்றுக் கொடுத்தார். அவர் ஒரு பந்த பாசமற்ற மஹாத்மா. கங்கோத்திரிக்குப் போகும் வழக்கமுடையவர். அன்பர்களுக்கு தரிசனம் அளிக்க ரிஷிகேசத்திற்கு எப்பொழுதாவது வருவதுண்டு. முக்திநாத், கோமுக் முதலிய இடங்களுக்கெல்லாம் அவர் சென்றிருக்கிருர். கங்கோத்திரி க்ஷேத்திரத்தின் மேல் அவருக்கு தனி அபிமானம் உண்டு. அஜீர்ணக் கோளாறினுலும், அசதியினுலும் கடந்த பௌர்ணமியன்று அவர் தேக வியோகமாகி விட்டார். உலகிற்கு இது ஓர் பேரிழப்பு. ''ஈஸ்வர தரிசனம்'' என்ற ஸமஸ்கிருத நூலும், ''இமகிரி விஹாரம்'' என்ற மலையாள நூலும் அவர் இயற்றியவை. சில ஸ்தோத்திரங்களையும் அவர் இயற்றியுள்ளார். அவருடைய ஓரிரண்டு புத்தகங்களுக்கு நான் முகவுரை எழுதியுள்ளேன். அவர் என்னை மிகவும் நேசித்தார். தனக்கு சேவை செய்த அன்பர்களுக்கு அவர் கடைசியாகக் கூறியதாவது:-

''உலகாயத சம்சாரமென்ற மயக்கத்தில் சிக்கிக் கொள்ளாதீர்கள். வாழ்நாள் முழுவதும் பற்றற்ற விரக்தியுடன் வாழ்ந்ததனால் நான் மிகவும் மகிழ்ச்சியாக உள்ளேன்''. அன்பர்கள் அவரை சிகிச்சைக்காக டெல்லி அழைத்துச் செல்ல விரும்பினார்கள். நான் டெல்லி செல்ல விரும்பவில்லை. மந்திரிகள் கூட டெல்லியில் மறிக்கவில்லையா? ஒருவன் மூன்று நாட்களுக்கு முன் இறக்கிறானா அல்லது மூன்று நாட்களுக்குப் பின் இறக்கிறானா என்பதே பிரச்சினை. எனது தேகத்தை கங்கையில் தூக்கி யெறியவே நான் உத்ரகாசிக்கு வந்தேன்'' எனக்கூறி டெல்லி செல்ல மறுத்து விட்டார். எனவே அவரது மரணம் அவருக்கு ஒரு பெரும் சிறப்பு. கலந்துரையாடலில் அவர் சிறந்தவர். பிரசங்கம் செய்யாமல் வினாக்களுக்கு விடையளித்து அவர் சத்சங்கம் நடத்துவது வழக்கம். யார் என்ன கேள்வி கேட்டாலும், ஒவ்வொரு வினாவிற்க்கும் விருப்பமுடன் விடையளிப்பது அவர் பாணி.

அவருக்காக நாம் பிரார்த்திப்போமாக. அவர் ஜீவன் முக்தர். ஆகவே நாம் அவருக்காகப் பிரார்த்திக்க வேண்டிய அவசியமில்லை. இருப்பினும் அவருக்கு நமது அஞ்சலியைச் செலுத்துவோமாக.

## 21-1-1957 ஆயுள் ஆண்டவனால் தீர்மானிக்கப்படுகிறது :-

சுவாமிஜி அலுவலகத்திற்கு வந்து கொண்டிருக்கும் பொழுது, ஒரு வயது முதிர்ந்த பக்தை அவரிடம் ''என் இருமகன்களையும் பறிகொடுத்து பலகாலமாக நான் வருந்திக் கொண்டிருக்கிறேன், எனக்கு மன நிம்மதி கிடைக்கும் வாய்ப்பே இல்லை. எனவே எனக்கு கூடிய விரைவில் சாவு வர அருள்

பாலிக்க வேண்டும்'' என வேண்டினர். அந்த மாது விற்கு சுவாமிஜி அளித்த பதில்: ''ஆண்டவன் ஒருவனைப் படைக்கும் பொழுதே அவன் இவ்வளவு உணவு அவன் வாழ் நாளில் உண்ண வேண்டும் என விதித்திருக்கிறான். ஆண்டவனால் நிர்ணயிக்கப்பட்ட உணவு அருந்தி முடியும் வரை அவன் இறக்கவும் முடியாது; மேலும் நிர்ணயிக்கப்பட்டதை விடக் கூடுதலாக ஒரு கவளம் உண்ண அவன் இருக்கவும் முடியாது. எனவே ஆண்டவனின் நாமத்தைச் சொல்லிக்கொண்டு, மன அமைதி பெற முயல வேண்டும்.

## 22-1-1957 காலணியும் அல்வாவும்:- சத்சங்கம் முடிந்து, குடிலுக்குத் திரும்பும் பொழுது சுவாமிஜி சொன்ன கருத்து செறிவுள்ள ஒரு கதை:-

ஒரு நாள் காலணியும் அல்வாவும் ஒரு முனிவரிடம் தங்கள் குறைகளைக் கூறின.

செருப்பு கூறியதாவது:- ''பூஜிக்கத்தக்க முனிவரே! எனது பரிதாப வாழ்வைக் கேளும். அல்லும், பகலும், கல், முள், அசிங்கம் இவற்றின் மேல் நான் எனது எஜமானரைத் தாங்கிச் செல்கிறேன். அவருடைய மிகுதியான பளுவினாலும், அதிக வேலையினாலும், தினம் தினம் நான் தேய்ந்து வருகிறேன். ஆனால் என் எஜமானன் வீட்டிற்குள் எடுத்துச் செல்லும் மரியாதைகூட எனக்குக் கொடுப்பதில்லை. என்னை எப்பொழுதும் கதவிற்குப் புறத்தே விட்டு விடுகிறார். இந்த அவமதிப்பை என்னால் தாங்க முடியவில்லை. எனது சேவையை சிறிதும் என் எஜமானன் பாராட்டுவதில்லை.''

இதைக் கேட்ட முனிவரின் பதில் வருமாறு:-

''அன்புள்ள காலணியே! நீ மெய்யாகவே மாபெரும் கர்மயோகி! உன் எஜமானனுக்கு நீ செய்யும் பணியில் உன்னையே அழித்துக்கொண்டு மகத்தான தியாகம் செய்கிறாய். கல்லிலும் முள்ளிலும் நீ தேய்ந்து எல்லா கஷ்டங்களையும் பொருத்துக்கொண்டு உன் எஜமானனின் கால்களைக் கல்லிலிருந்தும், முள்ளிலிருந்தும் காப்பாற்றுகிறாய். உண்மையாக நீ தன்னலமற்ற தன்மையின் உருவமாகத் திகழ்கிறாய். நின் புகழ் ஓங்குக! ஆனால் நீ கர்மயோகத்தின் உத்தியை நன்கு புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. லாபத்தை சிறிதும் எதிர்பாராமல், பாராட்டைக்கூட எதிர்பார்க்காமல் தன் பணியை ஆண்டவன் வழிபாடு என்ற உணர்ச்சியுடன் செய்பவனே உண்மையான கர்மயோகி. தன்னுடைய எஜமானனுக்குச் செய்யும் பணியை எஜமானன் உருவிலிருக்கும் ஆண்டவனுக்குச் செய்யும் ஆராதனை என்று உணர்பவன் கர்மயோகி. தன் எஜமானனின் பாராட்டை எதிர்பார்ப்பதற்கு மாறாக அவனுள் உறையும் ஆண்டவனுக்குச் சேவை செய்ய ஒரு வாய்ப்பளித்தமைக்கு, எஜமானனுக்கு நன்றி பாராட்டுபவன் தான் கர்மயோகி. எஜமானனுக்குச் சேவை செய்கிறேன் என எண்ணாமல், அவர் உருவிலே இருக்கும் இறைவனுக்கு சேவை செய்வதாக நினைத்துக்கொள். கடவுள் எல்லா உருவிலும் உள்ளார். ஆண்டவனே எல்லாமாகவும் பரிணமித்துள்ளாரன்றி வேறில்லை. மேலும் பெருமைகளையும், மரியாதைகளையும், விஷமெனக் கருது. பெருமையையும், சிறுமையையும் ஒரு கர்மயோகி சமமாகக் காணவேண்டும். எல்லாச் சூழ்நிலைகளிலும் கர்மயோகி நிதானத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். உனது பணியை, ஆண்டவனின் ஆராதனையாகவே கருதி, ஒரு

பலனையும் எதிர்பாராமல் பெருமையையும், சிறுமையையும், வருத்தத்தையும், சுகத்தையும், இலாபத்தையும், நஷ்டத்தையும், ஒன்றுபோல் கருதி, தொடர்வாயானால், நித்யானந்தத்தை நிச்சயமாக அனுபவிக்கலாம். ஆகவே, காலணியே! நீ திரும்பிப்போய் உன் வினையைத் தொடர்ந்து செய்.

பின் அல்வா தனது புகாரைக் கூறலாயிற்று:-

''மரியாதைக்குரிய முனிவரே! எனது பரிதாபமான சரித்திரத்தைக் கருணைகூர்ந்து கேளுங்கள். இனிப்பு பக்ஷணக் கடையில் நான் இருக்கும் பொழுது அழகுடனும், நல்ல வாசனையுடனும், கவர்ச்சியுடனும் விளங்குகிறேன். அவ்வழியாகப் போவோர் ஒவ்வொருவரும் தங்கள் அன்புப் ப்பார்வையை என்மீது செலுத்தாமல் செல்வதில்லை. எனது வாசனையை முகர்ந்த அல்லது எனது பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே, நாவில் நீர்சுரக்கும்படி, அத்தனை அன்பு என்பால் மக்கள் கொண்டிருக்கின்றனர். நானில்லாத முக்கிய விருந்தோ, விழாவோ கிடையாது. ஆனால் துரதிருஷ்டவசமாக, மக்கள் என்னை உண்டவுடன் என்னிடம் பெரும் மாற்றம் ஏற்பட்டு விடுகிறது. சாப்பிட்டுச் சில மணி நேரம் சென்றபின் ஒதுக்குப் புறமான இடத்தில் துர்நாற்றமுடைய, அசிங்கமான மாறுபட்ட உருவில் நான் வெளியேற்றப் படுகிறேன். என்னைப் பார்க்கவே மக்கள் கூசுகிறார்கள். என்னைப் பார்த்தால் நிலத்திலே துப்புகிறார்கள். அல்லது மூக்கைப் பொத்திக் கொள்கிறார்கள். இந்த அவமரியாதையை என்னால் பொறுத்துக்கொள்ள முடியவில்லையே!''

இதைக்கேட்ட முனிவர் பகர்ந்ததாவது :-

''அன்புள்ள அல்வாவே! நீயும் காலணி போன்று ஒரு சிறந்த கர்மயோகி. உன்னை உண்பவருக்கு உன்னிடமுள்ள போஷாக்குத் தன்மையைக் கொடுத்து சேவை செய்கின்றாய். மக்களுக்கு போஷாக்கையும், சக்தியைக் கொடுப்பதிலும், அவர்களுடைய ருசிக்கும் தன்மையைத் திருப்திப் படுத்துவதிலும் உனது அழகு, வாசனை, பெருமை, ஏன் உனது உருவம், அத்தனையும் நீ அழித்துக் கொள்கிறாய். தன்னலமற்ற தியாகத்தின் நிலைக்களமாக அன்றோ நீ விளங்குகிறாய். ஆனால் அல்வாவே! உனது உருமாற்றத்திற்கு நீ வருந்தவேண்டாம். எனெனில் நீ இந்த பூத உரு இல்லை. அழகான வசீகரமான அல்வாவும் இல்லை. துர்நாற்றமுடைய மலமுமல்ல. நீ யாண்டும் மாறாத மாசற்ற ஆன்மா. நீ நித்திய சுத்த ஆத்மா. உன் உடலில் ஏற்படும் மாற்றங்களும், மாசுகளும் உன்னைப் பாதிக்காது. பூத் உருவத்துடன் நீ ஒன்றுவது தகாது. உனது பங்கை மக்களுக்கு நீ வழங்கு. 'நான் செய்கிறேன்' என்ற எண்ணமில்லாமல் சாக்ஷி பாவத்தில் செய்யக் கூடிய சேவை உள்ளொளிக்கும், காலக்கிரமத்தில் மோட்சத்திற்கும் வழி நல்கும். பூத உடலுடன் ஒன்றுவது தான், எல்லாத் துன்பங்களுக்கும் கஷ்டங்களுக்கும் காரணம்.

இங்ஙனம் தேற்றப்பட்ட காலணியும், அல்வாவும் தங்கள் இருப்பிடத்திற்குச் சென்று மக்களுக்கு ஆராதனை நோக்குடனும், ஆத்ம பாவத்துடனும் சேவை செய்து, நித்தியானந்தமாகிய கைவல்யத்தைப் பெற்றன.

## 24-1-1957 ஆரோக்கியத்திற்கும், சமாதானத்திற்கும் பிரார்த்தனை:-

சத்சங்கத்தில் சுவாமிஜி கூறியதாவது:-

இன்று ஹைதிராபாத்தைச் சேர்ந்த திருமதி குமுதினியின் பிறந்த நாள். எனவே அவருடைய ஆரோக்கியத்திற்கும், நீண்ட ஆயுளுக்கும், சாந்திக்கும், ஆனந்தத்திற்கும் வளத்திற்கும் நாம் சங்கீர்த்தனமும் மிருத்யுஞ்ஜய ஜெபமும் செய்வோமாக. இந்த ஆசிரமத்திலும் மற்றும் பல இடங்களிலும் இசை நிகழ்ச்சிகள் செய்த புகழ் பெற்ற பாடகி பம்பாய் திருமதி. செல்லம்மாவிற்கும் இன்று பிறந்த நாள். அவளுக்காகவும் சங்கீர்த்தனம் செய்வோம்.

பிறகு சுவாமிஜி கூட்டுப் பிரார்த்தனையை நடத்தினர்.

காலம் சென்ற அன்பர் திரு. குஞ்சுக்கிருஷ்ணனின் ஆத்ம சாந்திக்காகவும் சுவாமிஜி பிரார்த்தனை செய்தார்கள்.

## 25-1-1957 அமரபாரதி பல்கலைக் கழகத்தை சுவாமிஜி வாழ்த்துகிறர்:

அமரபாரதி பல்கலைக் கழகம் என்று பெயரிடப் பட்டு டேராடூன் மாவட்டத்தில் நிறுவப்பட்டு இருக்கும் பல்கலைக் கழகத்தின் கோட்பாடுகளையும் குறிக்கோள்களையும் ஸ்ரீ S. L. சர்மா என்பவர் விளக்கிச் சொற்பொழிவாற்றினர். சர்மாவின் உரை முடிந்தபின் சுவாமிஜி அந்தப் புதிய பல்கலைக் கழகத்திற்கு பாராட்டுரை வழங்கினர்.

''கல்வி, நாகரிகம், பண்பாடு இவற்றைப்பற்றி அருமையான உரை நிகழ்த்திய ஸ்ரீ சர்மாஜி அவர்களுக்கு நாம் நன்றி உடையவர்களாகிறோம். அவர் பணி மலரட்டும். நற்குடி மக்களையும், ஒழுக்கமுடைய, ஆன்மீகப் பண்புள்ள நன்மக்களையும் உருவாக்கட்டும். சேவை, கர்மயோகம், தொழில் வளம், பண்பாடு முதலியவற்றின் கேந்திரமாகவும் ஒரு கலங்கரை விளக்கமாகவும் அமரபாரதி விளங்கட்டும்.

சுவாமி வெங்கடேசானந்தாவிற்கு வீணை கற்பித்தவர், பெரும் வீணைக் கலைஞர் என்று சுவாமிஜியால் வர்ணிக்கப்பட்ட ஸ்ரீ ரெங்க ராமானுஜம் ஐயங்காரின் 57வது பிறந்த நாளான இன்று அவருடைய அரோக்கியத்திற்கும், நீண்ட ஆயுளுக்கும், சுவாமிஜி திவ்யநாம சங்கீர்த்தனம் நடத்தினார்கள்.

## 27-1-1957 பிக்கா சிபாவிற்கு சுவாமிஜி கொடுத்த பாராட்டு:-

தென் ஆப்பிரிக்காவில் சுவாமிஜியின் தலை சிறந்த சீடரும், பிரிட்டோரியா தெய்வநெறிக் கழகக் கிளையின் ஸ்தாபகருமான, ஸ்ரீ சிவானந்தா பிக்கா சிபா ஒரு மாதத்திற்கு முன் ஆசிரமத்திற்கு வருகைதந்து, அண்மையில் தென் ஆப்பிரிக்கா திரும்ப இருக்கிறார். அதற்காக இன்றைய இரவு சத்சங்கத்தில் நடந்த பாராட்டு விழாவில் தென் ஆப்பிரிக்காவில் உள்ள தெய்வ நெறிக் கழக ஊழியர்களையும் சில மாதங்களாக ஆசிரமத்தில் இருக்கும் திரு. வி. தர்மலிங்கம் அவர்களையும் பாராட்டி பேசிய சுவாமிஜி திரு. பிக்கா சிபாவிற்கு பாராட்டிதழ் ஒன்றும் வாசித்தளித்தார். ''குருபக்திரத்ன''

என்ற பட்டம் திரு. பிக்காசிபாவிற்கும், திரு. தர்ம லிங்கத்திற்கும் சுவாமிஜியால் அளிக்கப்பட்டது. சுவாமி சிதானந்தா ஆற்றிய உறையில், தெய்வ நெறிக் கழகத்தின் உண்மையான உட்பொருளையும் தெய்வநெறி அரசியல் கோட்பாடுகளுடன் சம்பந்தப் பட்டதல்ல என்பதையும் ஸ்ரீ பிக்காசிபாவின் அரும் பணிகளையும் தெளிவாக விளக்கினார்.

சுவாமிஜி ஆற்றிய உரை :- இன்று ஓர் நன்னாள். ஏனெனில் தென்னாப்பிரிக்கப் பிரதி நிதிகளான ஸ்ரீ பிக்காசிபாவிற்கும் திரு. தர்மலிங் கத்திற்கும் மனம் திறந்த புகழுரையை நாம் இன்று அளிக்க இருக்கிறோம். ஸ்ரீபிக்காசிபா இங்கு மூன்று வாரம் அதாவது சுமார் ஒரு மாத காலம் தங்கி யிருந்து, நல்ல சாதனையும் மௌனத்தியானமும் சேவையும் செய்து வந்தார்கள். அவர் சிறந்த மௌன யோகி. என்னிடம் ஒரு வார்த்தை கூட பேசியதில்லை. எதைப்பற்றியும் புகார் கூறியதில்லை. அவர் ''போதுமென்ற மனமே சிறந்தது'' என்ற கீதையின் கோட்பாட்டைப் பின்பற்றி வாழ்கிறார். அவர் மௌனமாயிருக்கிறார். 'இந்த ஆன்மா மௌனமாக இருக்கிறது, என உபநிஷத் பறை சாற்றுகிறது. ஒரு சீடன் தன் குருவிடம் ''ஆத்மா வின் தன்மை என்ன''? என வினவினான். குரு மௌனமாயிருந்தார். மீண்டும் சீடன் கேட்டபோது ''ஆத்மாவின் இயல்பு மௌனம்'' என குரு கூறினார். ஆசை இல்லாத சப்தமற்ற இசை இல்லாத இடமே பிரம்மத்தின் இருப்பிடம். சிபா வும் மௌனமாகவே இருக்கிறார். பதினெட்டு நல்லியல்புகளைப் பற்றிய எனது பாடலில் உள்ள பல நற்பண்புகள் அவரிடம் அமைந்துள்ளன. உதாரண மாக சாந்தம் ஒழுங்கு முதலியன. எப்பொழுதுமே அவர் சாந்தமாகவும் அமைதியாகவும் உள்ளார். சாதனைகளை ஒழுங்காகப் பயின்றவர். அவரிடம்

படாடோபமில்லை. அவர் டாம்பீகமானவர் அல்லர்; எளிமையான பணிவுள்ள இனிமையான பண்பாளர். அவர் யாரென்பது ஒருவருக்கும் தெரியாது.

தர்மலிங்கம், பிக்காசிபா, சீனிவாசன், பிரதாப் கபோ, கென்னத்மூட்லி, சுப்பிரமணி, படையாச்சி, சிவபாக்கியம், ரெங்கநாயகி, நாயுடு, பதார், நாராயணதாஸ் ஆகியவர்கள் தெய்வ நெறிச் செய்தியால் தென்னுப்பிரிக்காவை வென்றவர்கள். அவர்கள் பெற்றிருப்பது ஓர் ஆன்மீக வெற்றி. இவர்கள் தென்னுப்பிரிக்காவின் ஆன்மீக அரசர்களும், ஆளுநர்களுமாவர். சீனிவாசன் காலை 5 மணிக்குத் துயில் எழுந்து நள்ளிரவு வரை வேலை செய்கிருர். ''ஒளி, சக்தி, விவேகம்'' என்ற பத்திரிகையை திரு. பிக்காசிபாவும், 'இறைவனை அறியும் மார்க்கம்' என்ற பத்திரிகையை திரு. சீனிவாசனும் ஆரம்பித்திருக்கிருர்கள். மிக்க ஊக்கமுடைய இவ்விரு செயல்வீரர்களின் இதயங்களிலும் இறைவன் உறைகிருன். ஆன்மீக உணர்வு, தியாக மனப்பான்மை, தன்னலமற்ற சேவைப் பண்பு, இவையே உண்மையான அரசர்க்கு அரசர்களையும். ஆட்சியாளர்களையும் உருவாக்குகின்றன வேயன்றி, அவன் பெற்றிருக்கும் செல்வத்தின் அளவல்ல. தியாக உணர்வும், பேரார்வமும் ஒருவனின் இதயத்தில் உதித்த மாத்திரத்திலேயே அவன் பதிநான்கு உலகத்திற்கும் மன்னன் ஆகிவிடுகிருன். ஐம்பது ரூபாய் சம்பளம் வாங்கும் சாதாரண குமாஸ்தாவான திரு. V. L. நாகராஜ் பெங்களூர் நகரையே எழுச்சியடையச் செய்துவிட்டார்.

ஸ்ரீபிக்காசிபா என்னுடன் ஒரு வார்த்தைகூடப் பேசியதில்லை. என் முகத்தை ஏறிட்டுப் பார்த்ததில்லை. ''இது கொடுக்கப்படவில்லை. அது

கொடுக்கப்படவில்லை'' என்று சிலர் வந்து இரண்டு மூன்று மணி நேரம் பேசி என்னைச் சலிப்படையச் செய்கின்றனர். கங்கை இருக்கிறது. இமயம் இருக்கிறது. உங்களுக்கு வேறு என்ன வேண்டும்! நீங்கள் உலகாயதப்பொருட்களை வேண்டிய அளவில் பெற்றிருக்கிறீர்கள். சிறிது தியாகம், தவம், துறவு இவற்றை இப்பொழுது மேற்கொள்ள வேண்டும். இவை ஒருவன் பெற முயற்சிக்க வேண்டிய நற்பண்புகள். ஸ்ரீபிக்காசிபா என் முகத்தைப் பார்த்ததில்லை. ஒரு வார்த்தை பேசியதில்லை. அவருடைய நன்னடத்தை, பெருந்தன்மை, வள்ளன்மை, இவை அத்தகையது. படிப்பும், புலமையும் உண்மையான மனிதனை உருவாக்கு வதில்லை. சேவையே ஒருவனை உண்மையான மனிதனுக்குகிறது. ஸ்ரீ பிக்காசிபா தன் வருமானத்தைப் பற்றிக் கவலைப் பட்டதில்லை. இப்பொழுது அவருக்கு வருமானமே இல்லை. ''நீங்கள் ஊருக்குத் திரும்பியவுடன், உங்கள் வருவாயைப் பெருக்குங்கள், உங்கள் நிதி நிலைமை யைச் செப்பனிடுங்கள், இதற்குச் செலவு செய்த நேரம் போக மீதி நேரத்தைச் சமுதாயத்திற்கு அளியுங்கள்'' என நான் கூறியிருக்கிறேன். அதுவே போதுமானது. சீனிவாசனுடன் கூட்டாக ''ஆன்மீக பாடங்கள்'' என்ற பெரு நூலை அவர் தயாரித்திருக்கிருர். அதில் எல்லா வேதங்களின் சாரமும் அடங்கியிருக்கிறது. தென் ஆப்பிரிக்கா வில் அது பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது. எளிமையான, ஒரு தலைப் பக்ஷமற்ற போதனைகளை யும், பாடங்களையும், ஐரோப்பியர்களும் புரிந்து கொண்டு பாராட்டுவதினுல், அவர்களும் தெய்வ நெறியின் அரவணைப்பில் வந்திருக்கிருர்கள். பல ஐரோப்பியர்கள் இப்படி வந்திருக்கிருர்கள்.

நான் இவர்களின் நல்ல ஆரோக்கியத்திற்கும், நீண்ட ஆயுளுக்கும், சாந்திக்கும், ஆனந்தத்திற்கும், வளத்திற்கும் பிரார்த்திக்கிறேன்.

முதற்கண் நன்னடத்தை, சம நிலையுள்ள உள்ளம், இப்பண்புகளைக் கொண்டு இவர்கள் இப்புவியை சுவர்க்கலோகமாக்கட்டும். "நீயே அது; தத்துவமஸி" என்ற உபநிஷத்தின் செய்தியைப் பரப்பட்டும். அறியாமை, ராகத்துவேஷம் இவை நீக்கப்பட்டால் நீ பிரம்மமாகவே விளங்குகிறாய்.

தர்மலிங்கம் சிறுபையன்போன்று தோற்றமளிக்கிறார். அவர் நள்ளிரவு பன்னிரண்டு மணி வரை வேலை செய்கிறார். பிரசங்கங்களும், பாண்டித்யமும் எதற்கு? சமுதாயத்திற்கு செய்யப்படும் தன்னலமற்ற சேவையே தேவை. இவைதான் ஓர் உண்மையான சாதுவை உருவாக்குகின்றன. அன்பு, நற்பண்பு, ஊக்கம், பக்தி, பேரார்வம், துறவு, பிரார்த்தனையில் ஈடுபாடு. ஆராதனையில் ஈடுபாடு இவை ஒரு மகானின் ஆரம்பமாக அமைகின்றன. இவற்றையே சிதானந்தா எப்பொழுதும் வலியுறுத்துகிறார். தர்மலிங்கத்திற்கு ஆண்டவன் ஆரோக்கியத்தை அருளட்டும். தென்னாப்பிரிக்காவின் ஆன்மீக அரசராக ஸ்ரீனிவாசனும், முதல்வராக அதாவது ஆன்மீகப் பிரதமராக சிபாவும், நிதி அமைச்சராக தர்மலிங்கமும் திகழ்கிறார்கள்.

நான் சீனிவாசனுக்கு ஒன்றும் அளிக்கவில்லை. ஆயினும் ஆயிரக்கணக்கானவர்களின் உள்ளத்தை அவர் மாற்றியது எப்படியென்பது எனக்குத் தெரியவில்லை. அவர் எளிமையும் பேராற்றலும் உடையவர். இதுபோலவே சிபாவும், படையாச்சியும் உள்ளனர். நாராயணதாஸும் அங்குள்ள மற்றும் பல தொண்டர்களும், எளிமையும் பேராற்றலும் உடையவர்களாகத் திகழ்கின்றனர்.

இமயத்திற்கும் தென்னுப்பிரிக்காவிற்கும் தொடர்பு உருவாயிருக்கிறது. இலங்கைக்கும், இமயத்திற்கும் தொடர்பு நிறுவப்பட்டிருக்கிறது. மந்திரிகள் உட்பட பல இலங்கை மக்கள் இங்கு வருகிறுர்கள். அவர்கள் இமயத்தின் அழகை ரசிக்கிறுர்கள். ஆப்பிரிக்காவிலிருந்து அநேகர் இப்பொழுது வந்துள்ளனர். எனவே இந்தியாவிற்கும் ஆப்பிரிக்காவிற்கும் தொடர்பு இருக்கிறது. டென்மார்க், ஜெர்மனி, பிரான்ஸ் முதலிய பல தேசங்களுடனும் தொடர்பு இருக்கிறது. இந்த தேச மக்களெல்லாம் இங்கு வருகிறுர்கள். ஓர் ஆன்மீக இணைப்பு ஏற்பட்டிருக்கிறது. இமயத்தின் எழிலுடன் தென் ஆப்பிரிக்காவுக்கும், ஏன் உலகமனைத்திற்குமே ஓர் ஆன்மீகப் பிணைப்பு உள்ளது என்று கூறலாம். நம் சிபா, தர்மலிங்கம், மற்ற சாதகர்கள் உலக மக்கள் அனைவருக்கும் சாந்தி, நல்ல ஆரோக்கியம், நீண்ட ஆயுள், வாழ்க்கையின் உயர் குறிக்கோளான கைவல்யம், சச்சிதானந்தத்தை ஆண்டவன் அருளட்டும். அவர்கள் சாந்தி பெறட்டும். ''நாவில் ராம நாமம். கையில் காரியம்,'' ராம நாமத்தை ஜபித்துக் கொண்டு சேவை செய்யுங்கள். எப்பொழுதும் சகஜ பாவத்தில் இருங்கள். ஆண்டவனுக்கு உள்ளத்தையும் உழைப்பிற்குக் கரங்களையும் நல்கிடுங்கள். இதுதான் ஒருங்கிணைந்த யோகம். இதயப் பண்பு, அறிவாற்றல், கைவண்ணம் இவற்றை அபிவிருத்தி செய்ய வேண்டும். ஆண்டவனின் நாமத்தைக் கீர்த்தனையாகப் பாடுவது, சமுதாயத்திற்கு சேவை செய்வது, உள்ளத்தை பிரம்மத்திடம் ஒன்றச் செய்வது, இதுதான் ஒருங்கிணைந்த யோகம். ''எனவே, யாண்டும் என்னை நினைத்துக்கொண்டே, போரிடு''. ''போரிடு'' என்று கண்ணன் சொல்வதின் பொருள்- ''உன் கடமையைச் செய்'' என்பதாகும். அச்சகத்திற்குச்

சென்று அங்கு உதவி செய்யுங்கள். சமுதாயத்திற்குச் சேவை செய்யுங்கள். ஆன்மீகம், சமூகம், தொழில், பொருளாதாரம், ஒழுக்கம் முதலிய துறைகளில் சமுதாயம் பயன் பெற உங்கள் பங்கை அளியுங்கள். உங்கள் உள்ளம் எப்பொழுதும் இயங்கிக் கொண்டே இருக்கட்டும். உங்களுடைய பொருட்கள், ஆன்மீக அநுபவங்கள், உள்ளக்கிடக்கைகள் இவற்றை மற்றவருடன் பகிர்ந்து கொள்ளுங்கள். இதுவே யோகம்.

## 30-1-1957 அமரர் சுவாமி ரெங்கநாதானந்தாவிற்குப் புகழாரம்:-

இன்றுமாலை, சிறிது காலமாய் நோய்வாய்ப் பட்டிருந்த, 67 வயதான சுவாமிஜியின் சீடரான ரெங்கநாதானந்தா மகா சமாதியடைந்தார். அவர் ஆசிரமத்தின் கணக்குவழக்குகளைக் கவனித்து வந்தார். சத்சங்கத்தில் சுவாமி ரெங்கநாதானந்தாவிற்கு சுவாமிஜி சூட்டிய புகழாரம்: ''இன்று சுவாமி ரெங்கநாதானந்தா, நம்முடைய டாடா சுவாமி மஹா சமாதி அடைந்து, பரத்தில் ஒன்றினார். நம்முடைய சுவாமி சிதானந்தா, அவருடைய நல்லியல்புகளையும், அவரைப் பற்றிச் சொல்ல வேண்டியதனைத்தையும் கூறினார். அவருக்குக் கடமை உணர்ச்சியும், செய்யும் தொழிலில் முழு ஈடுபாடும் இருந்தது. அமைதியான சுபாவமுள்ள சுவாமிஜியாக அவர் திகழ்ந்தார். சமுதாய நன்மைக்காக யாண்டும் அவர் பாடுபட்டார். தன்னுடைய பூத உடலை கங்கைக் கரையிலே உகுக்க வேண்டுமென்ற அவரது விருப்பமும் ஆசையும் நிறைவேறியது. நித்திய சாந்தியான ஆத்மாவில் அவர் அமைதி அடையட்டும்.''

## 31-1-1957 ஸ்ரீ H. நீலகண்டன் குடும்பத்தாருக்குப் பாராட்டு :-

இன்று இரவு சத்சங்கத்தில் கல்கத்தா திரு. H. நீலகண்டய்யரின் புதல்வி திருமதி சிவாநந்தினி யின் பிறந்தநாளையொட்டி அவருடைய ஆரோக்கி யத்திற்கும், நலத்திற்கும் சுவாமிஜி சங்கீர்த்தனம் செய்தார்கள். சங்கீர்த்தனம் ஆரம்பிக்குமுன் திரு. நீலகண்டய்யரின் குடும்பத்தாரைப் பாராட்டி சுவாமிஜி கூறிய சில வார்த்தைகள் :—

இன்று சிவானந்த நீலகண்டனின் குமாரி சிவா நந்தினியின் பிறந்த நாள். சிவானந்த சாவித்திரி, சிவானந்த முரளி, சிவானந்த நிர்மலா, சிவானந்த சுலோசனு, சிவானந்தினி-எல்லாமே சிவானந்தா. சிவா என்ருல் மங்களம், ஆனந்தா என்ருல் மகிழ்ச்சி. ஒவ்வொருவரும் மங்களத்திற்கும், மகிழ்ச்சிக்கும் உறைவிடமாகத் திகழ்கிருர்கள். ஸ்ரீ நீலகண்டய்யர் ஓர் மௌன யோகியும், செயல் வீரருமாவார். 8-வது அகில இந்திய தெய்வநெறி மாநாட்டை நடத்தியவர் அவரே. மாநாட்டிற் காக அவர் பல மாதங்கள் உழைத்திருக்கிருர். அந்த மாநாட்டிற்கு சுவாமி சிதானந்தா, சுவாமி நாதப்பிரம்மானந்தா, சுவாமி ஜோதிர்மயானந்தா சுவாமி சாரதானந்தா முதலியோர் சென்றிருந் தார்கள்.

அவர்கள் நன்கு கவனிக்கப்பட்டனர். எனவே சாவித்திரியை "அன்னபூர்ணி" என அழைக்கிருேம். இராப்பகலாக அவர்களுக்கு அவர் சேவை செய் தார். நீலகண்டய்யரும் அவர்கள் குடும்பத்தாரும் மாநாட்டின் வெற்றிக்காகப் பல மாதங்கள் வேலை செய்தார்கள். இதுவரை இல்லாத மகத்தான வெற்றியாக் அந்த மாநாடு அமைந்தது.

ஸ்ரீ நீலகண்டய்யர் பர்மா ஷெல் கம்பெனியின் துணை நிர்வாகி. அவர் நல்ல நூலொன்று எழுதிய பெரும் பண்டிதர். ஹாலாஸ்யத்தின் புதல்வர். முரளி, மணிப்புரிநடனம், கோபிலீலை இவற்றில் நுட்பமான திறமை படைத்த நாட்டியக் கலைஞர். துர்க்கா பூஜையின் பொழுது முரளியின் சகோதரி களான நிர்மலா, சுலோசனு, நந்தினி இவர்கள் ''துர்க்கா மகாத்மியம்'' என்ற நாட்டிய நாடக நிகழ்ச்சியை நடத்தினர். நிர்மலாவும் சிறந்த நாட்டியக் கலைஞர். சுலோசனு மிகப் பெரிய வயிற் றுடன் கணபதியாக நடித்தார். சிவாநந்தினிக்கு மட்டுமல்லாமல் நீலகண்டய்யர் குடும்பத்தாருக்கும் மற்றும் உலக மக்களனைவருக்கும் ஆரோக்கியமும், சாந்தியும் கிடைக்க வேண்டுமென்று வேண்டுவோ மாக!

---

## இரண்டாம் பாகம்

## 10-1-1949 அன்றும் இன்றும் :

மாலை 1 மணி அளவில் சிவா குடிலுக்கு எதிரில் ஓர் டாங்கா வந்து நின்றது. பாபா காளிகம்ளி வாலா க்ஷேத்திரத்திலிருந்து, அவர்களுடைய ஆலோசனைக் குழுவின் கூட்டத்திற்கு சுவாமி சிவானந்தாவை அழைத்துப் போக ஒரு சாது வந்திருந்தார். கூட்டம் 20-ந் தேதி நடைபெறு வதாக முன்பு தகவல் வந்திருந்ததினுல், எங்களுக் கெல்லாம் இந்த சாதுவின் வருகை ஆச்சரிய மளித்தது. எழுத்தர் தேதியைத் தவறுதலாக எழுதியிருக்க வேண்டுமெனத் தெளிந்தோம்.

இந்தத் தவருன தகவலினுல் ஏற்பட்ட அசௌ கரியத்தைப் பொருட் படுத்தாமலும், கடினமான

காலைப் பணிகளுக்குப் பிறகு ஒரு நிமிடம் கூட ஓய்வு எடுக்க விரும்பாமலும் வந்த சாதுவை, சுவாமிஜி, உடனே வரவேற்று உபசரித்தார்.

பதினைந்து நிமிடங்களுக்குள் நாங்கள் புறப்படத் தயாராகி விட்டோம். வழக்கம்போல் சிவாவின் ஒரு பையில் பழ வகைகளும், பிறிதொரு பையில் ஆன்மீக ஞானத்தைப் பரப்பும் பணியில் அவரது அயராத உழைப்பால் கனிந்த கனிகளாக புத்தகங்கள், துண்டுப் பிரசுரங்கள், பல இதழ்களின் பிரதிகள் முதலியனவும் இருந்தன.

க்ஷேத்திரத்தை அடைந்தவுடன், அதன் இணைச் செயலர் ராய்பகதூர் ஸ்ரீ தத்ஜி சிவாவை அன்புடன் வரவேற்றார். இந்த க்ஷேத்திரம், ரிஷிகேசக் கடைத் தெருவில் இருக்கிறது. கடந்த பத்து ஆண்டுகளுக்கு மேலாக சிவானந்தா இங்கு விஜயம் செய்யவில்லை. எனவே, கட்டிடங்களும், கடைகளும் வேகமாகத் தோன்றியிருந்ததையும், துறவிகளின் உறைவிடம் நகர்புறமாக மாறியிருந்ததையும் கண்டு ஆச்சரியப் பட்டார். சுமார் கால் நூற்றாண்டுகளுக்கு முன் ஒரு யாசகராக இந்த க்ஷேத்திரத்திற்கு வந்திருந்த சுவாமிஜி இன்று, மதிப்பிற்குரிய விருந்தினராகவும், ஆலோசகராகவும், க்ஷேத்திர நிர்வாகிகளால் கூப்பிய கரங்களுடன் வரவேற்கப்பட்டார்!

## விருந்தினர், விருந்தளிப்பவருக்கு விருந்தோம்புதல் :

உறுப்பினர் அனைவரும் கூடிய உடன், சிவானந்தாஜி பைகளில் இருந்த பொருட்களைக் காலி செய்ய ஆரம்பித்தார். பழங்களும், இனிப்புகளும், அங்கத்தினர்களுக்குச் சீராக வழங்கப்பட்டன. தெய்வீக வெளியீடுகளும் சுற்றிலும் வெள்ளமெனப்

பரவலாயின. ஸ்ரீ தத் அவர்களால் ''இதோ பாருங்கள், வழக்கமாக விருந்தளிப்பவர்தான் விருந்தினரை உபசரிப்பர். ஆனால் இந்த தெய்வீக புருஷர் விருந்தளிப்பவர்களுக்கே உபசரிக்கிறார்'' எனக் கூறாமல் இருக்க முடியவில்லை. உறுப்பினர் அனைவரும் தின்பண்டங்களை அவசரமாக அவை சரியாகச் சேர வேண்டிய இடத்திற்கு அனுப்பிக் கொண்டிருக்கும்பொழுது, ஸ்ரீ தத்ஜி மட்டும் பிரசாதத்தைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டேயிருந்தார். சற்று நேரம் சென்றபின் ஸ்ரீ தத் அவர்கள் பகர்ந்ததாவது ''வணக்கத்திற்குரிய ஒரு மகான் அளித்த இந்தப் பிரசாதம் எனக்கு வெறும் தின்பண்டத்திற்கு உரிய மதிப்பை விட பல்லாயிரம் மடங்கு மதிப்புடையதாகிறது. இவற்றை ஆண்டவனின் அருட் பிரசாதமாகவே நான் கருதுகிறேன். எனவே இவை பல காலம் கெடாமல் இருந்தாலும் இல்லாவிட்டாலும், பல நாட்கள் இந்தப் பிரசாதத்தைப் பத்திரமாக வைத்திருந்து நான் உபயோகிப்பேன்''.

## சிவானந்தரின் திட்டம் :-

க்ஷேத்திரத்தின் சார்பில் ஒரு பண்பாட்டு மையம் ஏற்படவேண்டுமென சுவாமிஜி பல நாட்களுக்கு முன்பே தூண்டியிருந்தார். அந்த அமைப்பைப் பற்றிய செயல் திட்டம் முதன் முறையாக இந்தக் கூட்டத்தில் விவாதிக்கப்பட்டது ஒரு மகிழ்ச்சிகரமான பொருத்தமாகும். ஒன்றரை வருடங்களுக்கு முன் க்ஷேத்திரத்தின் தலைவரின் மகன் ஆசிரமத்திற்கு வந்திருந்த பொழுது, சுவாமிஜி அவரிடம் இந்தத் திட்டத்தின் அமைப்பை வாய்மொழியாகக் கூறியிருந்தார். பிறகு ஸ்ரீ தத் அவர்களுக்குத் தன் எண்ணங்களை விளக்கி விரிவான கடிதமும் எழுதியிருந்தார். இந்த யோசனைகளின்

அடிப்படையில் திட்டமிட்டு அவர்கள் நிதி வசூல் கூட ஆரம்பித்துவிட்டார்கள்.

ஸ்ரீ தத் அவர்கள், சுவாமிஜிக்கு, இதுவரை தயாரித்துள்ள திட்டங்களனைத்தையும் காட்டி, அவற்றின் தற்கால நிலை பற்றித் தெரியப்படுத்தினார். கல்கத்தாவிலுள்ள தலைமைக் கமிட்டிக்கு, அவர்கள் கவனத்தை முழுமையாக இத்திட்டத்தின் பால் திருப்பி அதை நிறைவேற்ற வேண்டுமெனச் சிபார்சு செய்யும் சக்திவாய்ந்த சொற்கட்டுடைய தீர்மானம் இக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.

## ஆட்கொள்ளும் ஆற்றல் :-

தேநீர் வழங்கப்பட்டது. கூட்டமும், விவாதமும் அநேகமாக முடிந்திருந்தது. மிகப் படித்த ஓர் உறுப்பினர், விழாவை நிறைவு செய்யும் முகமாக ''நல்லது! இத்துடன் விழா நிறைவு பெறுகிறது!'' எனக் கூறினார்.

- உடனே, சிவானந்தா கண்களை மூடிக்கொண்டு ''நாம் இப்பொழுது சிறிது கீர்த்தனைகள் பாடுவோம்'', என்று சொல்லி, இச் சொற்கள் எங்கள் செவியை எட்டுமுன்பே ''ஹரே ராம ஹரே ராமராமராம ஹரே ஹரே! ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே! நமசிவாய! நமசிவாய! நமசிவாய!'' எனக் கீர்த்தனை ஆரம்பமாகியது. வழக்கப்படி சாந்தி மந்திரத்துடன் இதை சுவாமிஜி நிறைவு செய்தார். ஸ்ரீ தத்தின் மகிழ்ச்சி கட்டுக்கடங்கவில்லை. ''ஆண்டவனின் புனித நாமத்தை இந்த நிகழ்ச்சிக்குச் சிகரமாக அமைத்துவிட்டீர்கள்'' என அவர் கூறினார்.

நாங்கள் மூவரும் விஸ்வநாத் பாக்கிற்கு விஜயம் செய்துவிட்டு, நடந்தே ஆசிரமத்திற்குத் திரும்ப ஆரம்பித்தோம். ஆனுல் உடனேயே சாதுக்களும் அன்பர்களும் சுவாமிஜியைச் சூழ்ந்து கொண்டு உடன் நடக்கலாயினர். சுவாமிஜியைச் சிறிது தூரத்திற்கு ஒருமுறை யாராவது நிறுத்தி வீழ்ந்து வணங்கும், ஊர்வலமாகவே இது அமைந்தது.

## 11-1-1949 சுவாமி ராமானந்தாஜி :

இன்று ஏகாதசி. சில பஞ்சாங்கங்களின்படி வைகுண்ட ஏகாதசி.

அதிகாலையில் நாங்கள் சுவாமி ராமானந்தாஜி யின் அறைக்குச் சென்ற பொழுது, அவர் தேக வியோகமாயிருப்பதைக் கண்டோம். கடந்த சில வாரங்களாக அவர் ஆஸ்த்மா நோயினுல் பீடிக்கப் பட்டிருந்தார். ஆனுல் அவர் முடிவு திடீர் என்றும் எதிர் பாராததாகவும் இருந்தது. கடைசி நாள் வரை அவர் தனது பணிகளைச் செய்து வந்தார்.

சிவானந்தரிடம் இச்செய்தி தெரிவிக்கப்பட்ட வுடன் அவர் தலையை அசைவுடன் நிறுத்திக்கொண் டார் சிறிது நேரத்திற்குப் பிறகு நாங்கள் புனித நீராட்ட பூத உடலை வெளியே எடுத்த பொழுது, நிர்மலமான முகத்தைக் கண்ட சிவானந்தர் ''அவரிடம் சாவின் சாயலே இல்லை. அவசரப் படாதீர்கள். மீண்டும் சுவாசத்தை செயற்கை முறையில் கொண்டு வர முதலில் முயலுங்கள். இரண்டொரு ஊசி போடுங்கள். அவர் சாதாரண மயக்கத்தில் இல்லை என்பதை உறுதி செய்து கொள்ளுங்கள்'' எனக் கூறினுர்.

சீடர்கள் அங்கும் இங்கும் விரைந்தனர். இருவர் ராமானந்தாஜியின் பாதங்களில் டர்பன்

டைன் தைலத்தைத் தேய்த்தனர். இருவர் செயற்கை முறை சுவாசம் கொடுத்தனர். சிதானந்தாஜி ஊசிகள் போட்டார். சிவானந்தர் உடலுக்கு அருகில் உட்கார்ந்து கொண்டு ''ஹரே ராம ஹரே ராம'' எனக் கூறிக் கொண்டு இதயத்தை தடவிக் கொண்டிருந்தார்.

செயற்கை முறை சுவாசம் கொடுத்துக் கொண்டிருந்த பத்மநாபன்ஜி, ராமானந்தாஜியின் கையை விட்டவுடன், அது சுவாமி சிவானந்தாவின் பாதங்களைத் தொட்டுக் கொண்டு வீழ்ந்தது.

சிறிது நேரத்திற்குப் பின், பல மணி நேரங்களுக்கு முன்பே ஆவி பிரிந்து விட்டது என அறிவிக்கப்பட்டது. ''சரி, கிருஷ்ண பகவானுக்கு ஜே!'' எனக் கூறி சிவானந்தா ஈமச் சடங்குகளைச் செய்ய எங்களுக்கு அனுமதி வழங்கினார். பஞ்சாக்ஷர கீர்த்தனை சொல்லி, ஒரு குடம் நீரை ராமானந்தரின் உடலின் மேல் சிவானந்தா ஊற்றினார்.

புனித நாளில், ஒருவருக்கும் தொந்தரவு கொடுக்காமல், பணி செய்யும் பொழுதே, கடைசி மூச்சு வரை உழைத்துவிட்டு, அமைதியாக அமரத்துவம் பெற்ற ராமானந்தாஜியைப் பற்றியும், மற்றும் அவரைப் பற்றி பல விஷயங்களையும், அனைவரும் பேசிக் கொண்டிருந்தனர். சிவானந்தர் உடனே இயம்பினார் : ''ஏன்! அவரது வாழ்நாள் முழுவதுமே மிகவும் போற்றத்தக்கதாக அமைந்தது. அவர் முழுமையான வேதாந்தி இங்கு வந்த பிறகு பூர்வாசிரம குடும்பத்துடன் அவருக்குத் தொடர்பே இல்லை. உணவுக்காகவோ, மற்ற வசதிகளுக்காகவோ அவர் ஏங்கவில்லை. அவர் மற்றவர் விவகாரத்தில் தலையிட்டது கிடையாது. அவர் செம்மையான வாழ்வு வாழ்ந்தார்.

ரங்கூனில் இரு தெய்வ நெறி மாநாடுகளையும், ஒரு சர்வ சமய மாநாட்டையும் அவர் கூட்டினார். மனித குலத்திற்கு அவர் மகத்தான சேவை செய்தார். இன்னும் என்ன வேண்டும்!?''

''சுவாமிஜி! எத்தனை தேக அசௌகரியங்கள் இருந்தாலும், ஆசிரமத்தை விட்டுப் போக மாட்டேன். இறப்பதானாலும் சுவாமிஜியின் திருவடியில் அது நிகழவே விரும்புகிறேன்'' என்று அவர் கூறிக்கொண்டிருந்தார்'' என்பதை ஒருவர் குறிப்பிட்டார்.

சுவாமிஜியின் கடைசி ஆசை முழுமையாக நிறைவேறியது குறிப்பிடத்தக்கது.

அவர் ஆத்மா சாந்தி பெறுவதாகுக!

## 12 ஜனவரி 1949 நான்காவது வழிமுறை:

எஸ். என். அவர்கள் புகழ்ந்துரைத்தபடி சிவானந்தா ஒரு செம்மையான எஜமானர். சாணக்கியரைவிட நுண்மையான வழிகளைப் பின் பற்றும் ஒரு முதல்தரமான ராஜதந்திரியாவார். சாதகர்களை நெறிப்படுத்த சாம, தான, பேத, தண்டம் என்னும் நான்கு செயல் முறைகளையும் அவர் கடைபிடிப்பார்.

நான்காவது மார்க்கம் கடைப் பிடிக்கப்படும் நாளை நான் ஆசீர்வதிக்கப்பட்ட நாளாகக் கருதுகிறேன்.

இந்த உலகில், நமக்கு எட்டாத பொருளாகிய ஆண்டவனை அடைவதிலேதான் மெய்யான புனிதம் அமைகிறது. சிவானந்தரைப் பொறுத்த மட்டில்,

தண்டிப்பதென்பது, மிக மிக அபூர்வமான நிகழ்ச்சி. அவருடைய கோபாவேசத்தைக் காணும்பொழுது ஒரு வித்தியாசமான உணர்ச்சி என்னுள் எழுகின்றது. அவருடைய கோபம் எந்த சீடரின் மேல் திருப்பப்படுகிறதோ அவர் பாக்கியவான் ஆகிறார். ஏனெனில் பெறுதற்கரியதை அவர் பெறுகிறார். கோபாவேசமுள்ள சிவானந்தாவினால் சீடன் நிரந்தரமான நன்மை பெறுமாறு மாற்றியமைக்கப்படுகிறான்.

காலை வகுப்புகளுக்கு போகாமல் இருக்கும் ஒரு ஆசிரமவாசியை வழியில் காணும் பொழுது இந்த நிகழ்ச்சி நடந்தது.

''நீர் காலை வகுப்பிற்கும், மாலை வகுப்பிற்கும் கூட வருவதில்லை. ஏன்? சில சம்ஸ்கிருத பாடங்களைப் பாராமல் படிப்பதால் பண்டிதனாகிவிடலாமென எண்ணுகிறாயா?'' என்று சிவானந்தா எங்களை நோக்கி, ''இப்பேர்ப்பட்டவர்களை ஆசிரமத்தில் வைத்துக்கொள்ளக் கூடாது. எனக்கு வேலைபற்றிக் கவலையில்லை. கூலியாட்களை வைத்து வேலைகளைச் செய்யலாம்'' என்றார். மீண்டும் அவனைப் பார்த்து ''நீ எப்பேர்ப்பட்ட சாதுவாக உருப்பெறுவாய்? ஒழுக்கமற்றவனே! நியதி முறைகளை முறிப்பவன் மிக மோசமான குற்றவாளி! மேலும் உனக்கு ஏற்படக்கூடிய மிகப் பெரிய நஷ்டத்தைப் பற்றி நினை! நான் ஒரு வகுப்பைக் கூடத் தவறவிடுவதில்லை. யாண்டும் கற்றுக் கொள்ள வேண்டுமென்ற மனப்பாங்குள்ள மாணவனாகச் செல்கிறேன். ஆனால் நீ எல்லாம் கற்றுவிட்டதாக நினைக்கிறாய்! என்னே பரிதாபம்!''.

அந்தப் பையன் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு நழுவி விட்டான். அக்கணமே

சிவானந்தாவின் கோபாவேசமும் மறைந்து விட்டது. அன்புத் தாய் போல் மிருதுவாகி அவர் மேலும் நடக்கலானார்.

## 13 ஜனவரி 1949 தலையாய பரிவு :

மனிதனின் பரிவு பொதுவாகத் தன் மேல் மட்டுமே இருக்கிறது. அப்பொழுது அவன் நாலு கால் பிராணிகளை ஒத்திருக்கிறான். இன்னும் சற்றுப் பரந்த நோக்குடைய மனிதனின் பரிவு தன் குடும்பத்தவருக்கும் விஸ்தரிக்கப்படுகிறது. இந்நிலையிலும் அவன் மிருகத்தன்மையின் எல்லையைத் தாண்டவில்லை. மற்றொரு மனிதனின் பரிவு, படிப்படியாகக் கிராமம், மாவட்டம், தேசம் என்று பரவுகிறது. இந்த மனிதனிடம் ஓரளவு தன்னலமற்ற தன்மை பரிணமிக்கிறது. இவன் தான் உண்மையான மனிதன். ஒரு தபஸ்வியின் பரிவு மனித இனம் முழுவதற்கும் உரித்தாகிறது. ஒரு தெய்வீக மனிதனின் பரிவு எல்லா உயிரினங்களுக்கும் விஸ்தரிக்கப்படுகிறது. இருந்த போதிலும் இப் பரிவு கூட இவ்வுலக எல்லைக்குட்பட்டதே! இத்தகைய தளங்களையெல்லாம் கடந்து விளங்கும் பரிபூர்ணப் பரிவை என்னவென்று அழைப்பது? சிவானந்தரின் பரிவு அத்தகையது.

காலை வகுப்பு முடிந்தவுடன், திடீரென்று, சுவாமிஜி ஒரு பிரேரணையைத் தெரிவித்து எங்களைத் திணற அடித்தார். ''இப்பொழுதிலிருந்து, பிரதி மாதமும், முதல் தேதி அனைத்து ஆன்மாக்களின் நாளாக இங்கு கொண்டாடப்படும். மறைந்த எல்லோரின் சார்பில் சிறப்புப் பிரார்த்தனைகள் செய்யப்பட வேண்டும். தற்கால லோகாயத உலகில், நெடுநாட்களுக்கு முன்பே தர்மம் மறைந்து விட்டது. முன்னோர்களை வழிபடுதல், திதி,

தர்ப்பணம் இவற்றையெல்லாம் தவறு என்று கண்டிக்கும் பல சமயங்கள் இந்தியாவிலேயே தோன்றியிருக்கின்றன. இறந்தவர்களின் ஆன்மாக்கள் பெரும் வருத்தமடைந்துள்ளன. இயல்பாகவே அவைகள் உதவிக்கு நம்மை எதிர் நோக்குகின்றன. நாம் இதைச் செய்யவேண்டும்.''

ஆசிரமத்திற்குச் சிறிது காலமுன்பு ஆவியுடன் பேசும் ஒரு நபர் விஜயம் செய்திருந்த பொழுது, பல மறைந்தவர்களின் ஆவிகளுடன் தொடர்பு கொண்டு, அந்த ஆவிகள் தாங்கள் சாந்தியடையச் சிவானந்தா செய்த சங்கீர்த்தனைகளுக்கும், பிரார்த் தனைகளுக்கும் என்றென்றும் கடப்பாடுடைய வர்களாக இருக்கிறோம் என்று அறிவித்ததையும், சிவானந்தரின் கருணையால் தாங்கள் உயர்ந்த பலன்கள் பெற்றோமென்று கூறியதையும் ஒருவர் குறிப்பிட்டார்.

ஸ்ரீ கௌரி பிரசாத்ஜியின் உறவினரின் ஆவி, சுவாமி சிவானந்தாவின் கீர்த்தனைகளைக் கேட்ட வுடன் மிகவும் சாந்தியடைந்ததாகவும், எனவே சுவாமியின் குடிலுக்கு அண்மையிலேயே ''வசிக்க'' விரும்புவதாகவும் தெரிவித்த சம்பவம் ஏற்கனவே குறிப்பிடப்பட்டதாகும்.

ஆவிகள் தின நிகழ்ச்சிகள் எப்படி அமைய வேண்டுமென்பது பற்றிச் சிவானந்தர் தொடர்ந்து கூறினார். ''காலையில் மறைந்த ஆவிகளுக்குப் பிண்டங்கள் சமர்ப்பிக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டும். கோவிலில் விசேஷ ருத்ர ஏகாதச அபிஷேகம் நடைபெறும். ஏழைகளுக்கு உணவும், சாதுக்களுக்குச் சாப்பாடும் வழங்கப்படும். மாலை யில் சிறப்பு கங்கா பூஜை நடைபெறும். அவ்வமயம் மறைந்த ஆன்மாக்களின் சார்பில் விளக்குகள்

மிதக்க விடப்படும். கோவிலில் விசேஷ தீப அலங்காரங்கள் செய்யப்படும்.''

''மேலும் செலவுகள்'' என்று கூறி ஒரு ஆசிரம வாசி முகத்தைச் சுளித்தார். உடனே, சிக்கலைப் புரிந்து கொண்ட சிவானந்தர், ''ஓ! நிதியைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். அது கிடைக்கும். பித்துருக்கள் பிரீதியடைந்தால், அவர்கள் தங்கள் வழித்தோன்றல்களை, கழகத்திற்குப் பொருள் வழங்கும்படித் தூண்டுவார்கள். இந்த ஏற்பாட்டைக் கேள்விப்படும் வயோதிகர்கள் தங்கள் சொத்தின் ஒரு பகுதியைக் கழகத்திற்கு அளிக்க வேண்டுமென்று தங்கள் உயிலில் ஏற்பாடு செய்வார்கள். நமது குறிக்கோள் தூய்மையானதாக இருக்க வேண்டும். நாம் யாண்டும் தன்னலமற்ற அன்புடன் அனைவருக்கும் சேவை செய்ய விழைய வேண்டும். ஆண்டவன் நம்மைக் கவனித்துக் கொள்வார்'' என்றார்.

''சுவாமிஜி! நீங்கள் கூறுவது முற்றிலும் சரி. நாம் கோவிலில் வழிபாடுகளைத் தொடங்கினோம். அதிலிருந்து ஆசிரமத்தின் செல்வநிலை அருமையான உயர்வை எட்டியிருக்கிறது. இத்தனை விரைவாக ஆசிரமம் வளரும் என்று யார் எதிர்பார்த்தார்கள். எத்தனை குடில்கள்! எத்தனை டைப்ரைட்டர்கள்! எத்தனை நூல்கள்! இவையெல்லாம் விளையாட்டல்ல. வானவர் மிகவும் நன்றாக மகிழ்ச்சியடைந்திருக்கின்றனர் என்பதை உறுதிப்படுத்தும் அறிகுறிகள் இவை. ஆண்டவன் மிகவும் மகிழ்ந்திருக்கிறார். இங்கு இடையறாது நடைபெறும் ருத்ர சமக கோஷத்தைக் கேட்டுச் சிவபெருமான் திருக்கைலாயத்தைத் துறந்து இங்கு வந்து விஸ்வநாதர் கோவிலைத் தனது நிரந்தர வாசஸ்தலமாகக் கொண்டு விட்டார் என நான் கூறுகிறேன்''

என்றார் ஒரு முதிய ஆசிரமவாசி. மற்றொரு ஆசிரமப் பெரியவர் மெதுவாகக் கூறியதாவது ''ஆனால், சுவாமிஜி, நீங்களோ அத்வைத வேதாந்தி! நீங்கள் இந்தச் சடங்குகளை ஏன் ஊக்குவிக்கிறீர்கள். மறைந்த ஆன்மாக்கள் எங்கு இருக்கின்றன? அவைகளை நாம் எப்படித் திருப்திப் படுத்துவது?''

சுவாமிஜி பதில் கூறியதாவது ''அதுதான் நாம் செய்யும் தவறு. முழு முதல் உண்மையையும், நடைமுறையில் சார்ந்திருக்கும் தன்மையையும் குழப்பக் கூடாது! தேகம் உள்ளளவும், அதைப்பற்றி நாம் சிந்திக்கும்வரை அதை அலங்கரியுங்கள். அதற்கு ஆகாரமளியுங்கள். அதைப் பேணுங்கள். நீங்கள் தேகத்தைச் சார்ந்த நிலையில்தான் இருக்கிறீர்கள். வேதாந்தத்தைக் கற்கவும் புரிந்து கொள்ளவும் நீங்கள் எல்லா முறைகளிலும் முயற்சிக்கலாம். ஆனால் நடைமுறை விவகாரத்திற்கு அதைக் கொண்டு வரக்கூடாது. இந்தச் சரீரத்தைத் தங்கள் இஷ்டப்படி உபயோகிக்கவோ, உதறித் தள்ளவோ, செய்யும்படி ஒரு நைந்த தோல் பையாக நீங்கள் மாற்றியமைத்து விட்டீர் களென்றால், இந்தச் சடங்குகளையும் நீங்கள் உதறித் தள்ளலாம். அதுவரை நீங்கள் நம்பிக்கையோடு இந்தக் கர்மாக்களைச் செய்து வரவேண்டும்.''

## 14 ஜனவரி 1949 சிவகுடில் திறப்பு விழா:

ஸ்ரீ ஷெராபின் அன்பளிப்பான சிவகுடில் கட்டி முடிக்கப்பட்டுவிட்டது. முன்புறம் சிறப்பான இயற்கை எழிலுடனும், அருமையான வாய்ப்புடைய இடத்திலும், அது அமைந்திருக்கிறது. திறப்பு விழா ஹோமம் காலை 9 மணிக்கு நடைபெற்றுக்கொண்டிருந்தது. கிரஹப் பிரவேச

விழாவில் வழக்கமாகச் செய்யப்படும் 'பால் காய்ச்சுதல்' பக்கத்து அறையில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. எங்கும் தோரண அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. சிவானந்தர் எழுந்தருளி யதனால் சிவ குடில் சிறப்புப் பெற்றது. அவர் ஹோமத்தில் கலந்துகொண்டார். ஹோமம் நிறைவு பெற்றவுடன் ஸ்ரீ ஷெராப், திருமதி காந்தா, அவர்கள் மகன் அஜெய்குமார் மூவரும் சுவாமிஜியை வணங்கினர். ''ஆண்டவன், திரு. ஷெராப், திருமதி காந்தா, இளம் அஜெய்குமார் இவர்களுக்கு ஆரோக்கியத்துடன் கூடிய நீண்ட ஆயுளும், சாந்தியும், செல்வங்களும், நித்தியானந்தமும் அருளட்டும். இப்பிறவியிலேயே நீங்கள் ஜீவன் முக்தர்களாகப் பிரகாசிப்பீர்களாக!'' எனக் கூறி சுவாமிஜி அவர்களை ஆசீர்வதித்தார்.

குடிலில் வராண்டாவில் நடைபெற்ற பலமான விருந்துடன் விழா நிறைவு பெற்றது. சிவானந்தரும் விழாவில் கலந்து கொண்டார்.

## குழந்தைகளின் நடுவே ஒரு குழந்தை:

சுரேஷ் என்ற சிறுவன், டெஹ்ரி சுதந்திர தினத்தை, சிறுவர்கள், முனி-கி-ரேதியில் கொண் டாடவிருக்கும் கூட்டத்தைப் பற்றித் தெரிவிக்கும் சிறு அறிக்கையுடன் சுவாமிஜியை அணுகினான். அவ்வறிக்கையில் அதிகம் நன்கொடையும் கோரப் பட்டிருந்தது.

தனக்குள் சிறுவர்களின் ஊக்கத்தையும் முற் போக்கு மனப்பான்மையையும் பாராட்டிய சிவானந்தர் விளையாட்டாக ''ஓ! சுரேஷ்! இந்த வயதில் அதிகமாகத் தேநீர் அருந்தாதே! அது உன் ஆரோக்கியத்தைப் பாழாக்கும்!'' என்றார்.

ஏமாற்றம் படர்ந்த முகத்துடன் சுரேஷ் வெளியேறினான். இருந்த போதிலும், சுவாமிஜியிடம் பெற்ற பயிற்சி காரணமாக, இச்சிறுவர்கள் விழாவிற்கான ஏற்பாடுகளைத் தொடர்ந்தனர்.

மாலையில் குடிலுக்குத் திரும்பும் பொழுது கூட்டம் நடக்கும் இடத்தில் சிறுவர்கள் குழுமி இருப்பதைக் கண்ட சிவானந்தர் யாருமறியாமல் தானும் கூட்டத்திற்குள் நுழைந்தார். வாசுதேவன்ஜி, இனிப்பும், தேநீரும் வாங்க ஏற்கனவே கடைத் தெருவிற்குப் போயிருந்தார். புருஷோத்தமன்ஜி சுவாமிஜியின் ஆர்மோனியத்தைக் கொண்டு வந்தார்.

சிறுவர்களுடன் கூடிச் சிவானந்தர் கீர்த்தனைகள் பாடினார். தேநீரையும் இனிப்பையும் வழங்கினார். அந்தப் பகுதியின் தேச பக்த வீரர்களான, சுமன்தத், லக்ஷ்மணன் (வட்ட காங்கிரஸ் தலைவர்) முதலியவர்களைப் பாராட்டி, அக்கணமே, ஓர் பாடல் இயற்றிப் பாடினார். தேசீய கீதத்தையும் இசைத்தார். விழா மிக வெற்றிகரமாக அமைந்தது. எல்லா மாணவர்களும் மிகவும் ஆச்சரியப்பட்டனர்.

''சுவாமிஜி! நீங்கள் மிகவும் நல்லதோர் காரியத்தைச் செய்திருக்கிறீர்கள். நான் வற்புறுத்தியிருந்தால் நீங்கள் இரண்டு ரூபாய் அளித்து என்னை அனுப்பியிருப்பீர்கள். இப்பொழுது நீங்களே வந்திருந்து எங்களை ஊக்குவித்து, இந்தச் சிறு நிகழ்ச்சிக்குப் பத்து ரூபாய் வரை செலவு செய்திருக்கிறீர்கள்'' என்று கூறிய சுரேஷ் ''சிவானந்த மகராஜுக்கு'' எனக் கூறவும் மற்ற சிறுவர்கள் ''ஜே'' எனக் கோஷமிட்டனர்.

## குண்டலினி சக்தியை எழுப்புதல் :

காலை வகுப்புகள் முடிந்ததும் சிவானந்தர் திரு. ச அவர்களின் அறைக்குச் சென்றார். திரு. ச... அவர்கள் இன்னமும் படுக்கையில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். சிவாவின் ஓங்கார நாதம் அவரை எழுப்பிற்று. பிறகு சிவானந்தர் கூறியதாவது:- ''ச...! உனது குண்டலினி சக்தியை எழுப்பப் புதுமையான விசேஷமான ''தண்ட முறை'' தேவைப்படுகிறது. நான் ஒரு சிறிய கம்பை எடுத்து, உனது குண்டலினி சக்தி விழிப் படையும்படி நன்கு பலமாகச் சிலஅடிகள் கொடுக்க வேண்டும். உன்னிடம் உயிர் இருப்பதையே ஒருவரும் அறிய முடியா வண்ணம் சக்தி செய லற்றுக் கிடக்கிறது. நீ இவ்வளவு வாலிபனாக இருந்தும், எவ்வளவு சோம்பலுடையவனாக இருக் கிறாய்! வகுப்புக்கு வரும்படி நான் அடிக்கடி உன்னிடம் கூறியிருக்கிறேன். நீ அதைக் காதிலே போட்டுக் கொள்வதேயில்லை. அடுத்த அறையில் இருந்த போதிலும் கூட, அலுவலகத்தில் நடக்கும் கீர்த்தனையில் நீ கலந்து கொள்வதில்லை. நீ வர வர ஒரு தகப்பன் சாமியாக மாறுகிறாய் என எண்ணு கிறேன்.''

எங்களை நோக்கிச் சிவானந்தர் கூறலானார் :- ''குண்டலினி சக்தியை எழுப்பப் பல முறைகள் இருக்கின்றன. ஹட யோகக் கிரியைகள், பிராணாயாமம், குரு கடாக்ஷம், பக்தி, தன்னல மற்ற சேவை இவற்றில் ஒன்றின் மூலமாகக் குண்டலினி சக்தியை எழுப்பலாம். ஒரு விசேஷப் பலப் பிரயோக மார்க்கம் அதாவது தண்ட மார்க்கம் ஒன்று உள்ளது. இம் முறைக்கு விசேஷ மதிப்புள்ளது. எனது தண்ட மார்க்கம் மிகவும் நவீன வழி. நல்ல கம்பை எடுத்து நாலு அடி

கொடுப்பதே என் வழி. அப்பொழுது குண்டலினி சக்தி எழுப்பப்பட்டு சாதகன் சுறுசுறுப்படை கிறுன்.''

## மன அமைதிக்கு மாமருந்து :-

இரவு பிரார்த்தனைக்குப் பிறகு சிதானந்தாஜி, சுவாமிஜியுடன் அடிவாரத்திற்கு வந்து கொண் டிருந்தார். சிதானந்தாவின் குடில், மலை மீது இருப்பதால் அவர் வழக்கமாக இரவில் அடிவாரம் வருவதில்லை. இந்த வழக்கத்திற்கு மாறுன செய்கையைக் கண்ட சிவானந்தர் அதற்குக் காரணத்தை வினவிஞர். சிதானந்தாஜி, கழகத்தின் பொதுக் காரியதரிசியாகிய பிறகு இவ் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். ''சுவாமிஜி! சில கால மாக நான் அடிவாரத்தில்தான் இரவில் தங்கு கிறேன்'' என்ருர். ''ஏன்?'' என்று சுவாமிஜி கேட்க, சிதானந்தாஜியின் பதில்:

''சுவாமிஜி! மக்களிடையே ஏற்படும் பெரும் பான்மையான தப்பெண்ணங்களுக்கும், அபிப்ராய பேதங்களுக்கும், சமையல் அறையே பிறப்பிடமாக அமைகிறது. பிரச்சனைகளை அங்கேயே தீர்வு செய்வதற்கு வசதியாக, இப்பொழுதெல்லாம் என்னுடைய நேரத்தில் பெரும் பகுதியை சமையலறையிலோ அதற்கு அண்மையிலோ செலவு செய்கிறேன்.''

பரந்த பரிவுடைய சிவானந்தரை இக் கூற்று உடனே உணர்ச்சி வசப்படுத்தியது. ''கூடாது! கூடாது! சிதானந்தாஜி! இந்தப் பிரச்னைகளைப் பற்றி அலட்டிக் கொள்ளாதீர்கள். சமையல் வேலை மிகவும் சலிப்பூட்டக்கூடியது. விலை மதிக்க முடியாத உங்கள் சக்தியையெல்லாம், சிறு விஷயங்களில் விரயமாக்கிவிடுவார்கள்.

அடிவாரத்திற்கு வராதீர்கள். வேண்டாம்! வேண்டவே வேண்டாம்! தினந்தோறும் ஒருசில நிமிடங்கள் இந்த வேலையை மேற்பார்வை மட்டும் செய்யுங்கள். உங்கள் படிப்பு, தியானம் முதலியவற்றை நீங்கள் செய்துகொண்டிருங்கள். சமையலறை அரசியலைப் பற்றி எனக்கும் அனுபவமுண்டு. ஆனால் நான் அதைப் பொருட்படுத்துவதில்லை. ஆண்டவனின் சித்தப்படி நடக்கும். அவர் விரும்பினால் இங்கு மக்கள் இருப்பார். விரும்பவில்லையென்றால் இருக்க மாட்டார்கள். நான் எப்பொழுதுமே அமைதியாக உள்ளேன். ஏனென்றால் நான் எதற்கும் தயாராக உள்ளேன். எல்லோரும் போய்விட்டால் கூட, க்ஷேத்திரத்திலோ, இங்குள்ள வீடுகளிலோ பிக்ஷை பெற்று ஒரு குடிலில் தங்கியிருப்பேன். என்னிடம் வரும் சில நோயாளிகளுக்கு சேவை செய்வேன். அன்பர்கள் எனது நூல்கள் சிலவற்றை அச்சிட விரும்பினால் கொடுப்பேன். மீதிப் பொழுதெல்லாம் எனதே! மாதா மாதம் ரூபாய் நூறோ முன்னூறோ கிடைத்தால், கடினமாக உழைக்கும் சில சாதகர்களைக் கொண்டு சிறிய அளவில் பணியாற்றுவேன். லக்ஷக் கணக்கிலோ, கோடிக் கணக்கிலோ பணம் வந்தால் பணியை எந்த அளவுக்கும் விரிவாக்க நான் தயார். நான் எதற்கும் தயார். எனவே நான் யாண்டும் அமைதியாக உள்ளேன். நீங்கள் இந்த விஷயங்களைப் பொருட்படுத்தாதீர்கள். நாளை முதல் உங்கள் குடிலில் தங்கி, மேற்பார்வையிடும் பணியை மட்டும் செய்யுங்கள். நிதி நிலையைப் பற்றியும், சமையலறையைப் பற்றியும் கவலைப்பட்டுக்கொண்டிருக்காதீர்கள்.

சாந்திக்கும், தைரியத்திற்கும் பிறப்பிடம் துறவாக அமைகிறது.

## 22 ஜனவரி 1949
## வஞந்திரத்தில் டைப்ரைட்டரா?

பாரேயின் உயர் அதிகாரியான கமிஷனர், ஓய்வு பெற்ற நீதிபதி கனம் கௌரி பிரசாத்ஜி, சொர்க்காஸ்ரமத்தின் மகந்த் மூவரும் விஜயம் செய்தனர்.

சிவானந்தரை வணங்கிய பின், அவருக்கு முன் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் அமர்ந்தனர். உடனே, சுவாமிஜி விஷ்ணுசுவாமிஜியையும், பத்மநாபனேயும் அழைத்தார். அவர்களில் ஒருவர் தேநீரும் கனிகளும் கொணர்ந்தார். மற்றவர் அன்பளிப்பு புஸ்தகங்களைக் கொண்டு வந்தார். இவ்விருவரும் எப்பொழுதும் சேவை செய்ய தயார் நிலையிலேயே இருப்பர்.

சில நிமிடங்களில் விருந்தினர்களின் உடலுக்கும், உள்ளத்திற்கும் பிரசாதம்கிடைத்தது. ஆசனங்களின் விளக்கப் படத்தை அவர்களுக்கு அளிக்கும் பொழுது சுவாமிஜி ''இவற்றை நீங்கள் பயிற்சி செய்வீர்களா?'' எனக் கேட்டார்.

''ஆம். நிச்சயமாக சுவாமிஜி! நான் கட்டாயம் முயல்வேன்.''

சில நிமிடங்கள் கழித்து, அலுவலகத்தை நோக்கித் தன் பார்வையைச் செலுத்திய கமிஷனர் ஆச்சரியப்படுவது வெளிப்படையாகத் தெரிந்தது. ''இது உங்கள் அலுவலகமா?'' எனக் கேட்டார்.

கனம் நீதிபதியவர்கள் ''ஆமாம். இதுதான் சுவாமிஜியின் அலுவலகம். இங்கேதான் எண்ணிலடங்கா நூல்களும், பத்திரிகைகளும், வெளியீடுகளும், அறிக்கைகளும், கடிதங்களும் தயாராகின்றன. ஆன்மீக நூல்களை உலகெங்கும் வெள்ளமென சுவாமிஜி பரவச் செய்திருக்கிருர்'' என்ருர்.

கோயில், பஜனை மண்டபம், குகை முதலியன காட்டப்பட்டபின், கமிஷனர் விடை பெற்றார்.

## 8 ஜனவரி 1950

### சிவானந்தர் நீடூழி வாழ்க !

இரவு சத் சங்கம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. கீதை முதலியன படிக்க உபயோகப் படுத்தக் கூடிய விளக்கு கூட, கீர்த்தனை நேரத்தில், ஒளி குறைக்கப்பட்டு, தள்ளி வைக்கப்பட்டுவிடுவதால், பஜனை மண்டபம் அநேகமாக இருட்டாக இருந்தது. அகண்ட மகா மந்திர கீர்த்தனைப் பீடத்தின் இரு பக்கத்திலும் இருந்த தீபங்கள், எவ்வளவு முடியுமோ அவ்வளவு பிரகாசமாக எரிந்து கொண்டிருந்த போதிலும், அவைகளால் மண்டபத்தின் மூன்றில் ஒரு பகுதியில் கூட ஒளி பரவாமல், நுழைவாயில் இருட்டாக விடப் பட்டிருந்தது.

இந்த இருட்டு வாயில் வழியே ஒரு கரிய சக்தி உள்ளே நுழைந்தது. ஒளியின் சந்நிதானத்தில் இருட்சக்தியைப் பற்றி யாரே சிந்தனை செய்வர்?

கையில் கோடாலியுடன் கோவிந்தன் சிவானந்தரை அணுகினான். வாசலுக்கு அண்மையில் அமர்ந்திருந்த சிவானந்தரை நெருங்க அவன் அதிகச் சிரமப்பட வேண்டியிருக்கவில்லை. சாதகன் இருளைப் பிரிந்து தெய்வீக ஒளியை அணுகும் நுழை வாயிலில் தானே ஜொலிக்கும் ஆன்மீகத் தாரகை சிவானந்தர் நிற்பாரில்லையா? இப்படி நிற்பதால் ஏற்படும் ஆபத்துக்களைப் பரிவுக் கடலான அவர் பொருட்படுத்துவதில்லை. ஆனால் ஒளியை அடைய முயற்சிப்பவர் மீண்டும் இருளுக்குள் வழுக்கிவிடாமல் காக்க, வாயிலில் தான் நிற்பேன் என அவர் வலியுறுத்துவார்.

கோடாலி உயர்த்தப்பட்டது. விண்ணகத்தே வானவர் நடுங்கினர். வாயு பகவான் அமைதியிழந்து பஜனை மண்டபத்திற்கு வெளியில் ''ஓம்'' என்று ஒலித்துக்கொண்டு சென்றார். கோடாலி இறங்கிற்று. கோவிந்தனின் கையின் பிரதான தேவதையான இந்திரன் நடுங்கினான் — கோடாலி குறிதவறியது. அடியைப் பெற்ற மரக்கதவுகளின் பெருத்த சத்தம் எச்சரிக்கையாக ஒலித்தன. உயிரில்லா மரக்கதவுகளே! நீங்கள் பாக்கியவான்கள்.

கோவிந்தன் மேலும் நடுக்கமுற்றான். கோடாலியை மீண்டும் உயர்த்தினான். இந்தத் தடவை சுவற்றில் இருந்த ஒரு படம் குறுக்கிட்டு அடியை வாங்கிக்கொண்டது. ''எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் அளப்பரிய தோற்றத்தின் உட்பொருளுடன் தன்னை ஒருமைப்படுத்திக் கொண்டவர் அல்லவா சிவானந்தர்?'' என்ற கேள்விக்கு ''ஆம்'' எனப் பதில் சொல்வது போல், சிவானந்தரின் தலைக்குப் பதில் தன் தலையைக் கொடுத்த உயிரற்ற படத்தின் செய்கை அமைந்தது.

இரண்டு அடிகளும் குறி தவறின. கோடாலியின் மரக் கைப்பிடி மட்டும் சிவானந்தரின் தலையில் பட்டது. குளிர் காலங்களில் தனது குடிலிலிருந்து பஜனை மண்டபத்திற்கு வரும் பொழுது அணிந்து வரும் துணித் தலைப்பாகையை, வழக்கமாக, மண்டபத்திற்குள் நுழையும் பொழுது அவிழ்த்து விடும் சுவாமிஜி, இன்று அவிழ்க்க மறந்துவிட்டார். ஆம்! மறந்துவிட்டார். எனவே கோடாலிக் கைப்பிடியின் அடி, சிவானந்தரின் தலையின் மேலிருந்த துணி மடிப்புக்களையே தாக்கியது.

தன்னை யாரோ தாக்குகிறார்கள் என்று சுவாமிஜிக்குப் புலனானது. தான் ஒரு கம்பினால் தாக்கப்படுவதாக நினைத்தார். தன் தடக்கையை

உயர்த்தி ''நீ வேலையை முடித்துவிட்டாயா! மேலும் என்னை அடிக்க விரும்புகிறாயா?'' என்று கேட்டார். மேலே உயர்த்தின கை கோடாலியின் அடியை வாங்கிக்கொண்டது. தோலின் மேல் சிறிய சிராய்ப்பு ஏற்பட்டது. ஒருவேளை கோடாலி இந்தப்புனிதரின் கையை முத்தமிட இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டதோ என்னவோ?

சிவானந்தருக்கு அருகில் அமர்ந்திருந்த ஹட யோக வல்லுனரான, விஷ்ணு சுவாமிஜி, ஒரே துள்ளலில் எழுந்து, கோவிந்தனுல் கையை மீண்டும் அசைக்க முடியா வண்ணம் அவனை இறுகக் கட்டிப் பிடித்துக்கொண்டார். கோவிந்தனை அவர் மண்டபத்திற்கு வெளியே இழுத்துச் சென்றார். பிரார்த்தனை மண்டபத்தில் கூடியிருந்தோர், நடந்ததை உடனே அறிந்தனர். ஓரிருவர் கோவிந்தனின் கைகளையும், கால்களையும் கட்ட உதவினர். கூட்டத்தில் வழக்கமாக நடைபெறுவது போன்று ஓரிருவர் கோவிந்தனின் மேல் விழுந்து அவனை அடிக்க ஆரம்பித்தனர். கூட்டத்தின் கூக்குரலையும் மீறி ''ஓ! அவனை அடிக்காதீர்கள்! அவனை அடிக்காதீர்கள்!'' என்று சிவானந்தர் மிக உரக்கக் கூறியதை யக்ஞசாலை அறையில் இருந்த பத்மநாபன் கேட்டார். பஜனை மண்டபத்தில் நடந்ததை அறியாத பத்மநாபன், கோவிந்தன் தரையில் படுத்திருக்கவும் அவனை சிலர் அடிப்பதையும், சுவாமிஜி ''அவனை அடிக்காதே!'' என்று கூப்பாடு போடுவதையும் கண்டார். அவனை மீட்டு அருகிலுள்ள ஓர் அறையில் தள்ளிப் பூட்டிவிட்டார்.

சிவானந்தர் ''கீர்த்தனையைத் தொடருங்கள்'' எனக் கூற, கீர்த்தனை, ஆரத்தி, சாந்திபாடம் இவை முறைப்படி நடத்தப் பெற்று சத்சங்கம் நிறைவு பெற்றது.

இதற்கிடையில் சாஸ்வதசுவாமிஜி, வைர விழா மண்டபத்திற்கு ஓடி வந்து, அங்கிருந்த எங்களிடம், பஜனை மண்டபத்தில் நடைபெற்றதை கோர்வையற்ற வார்த்தைகளில் தெரிவித்தார். நாங்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினோம். இரண்டு போலீஸ்காரர்கள் பின் தொடர பஜனை மண்டபத்திற்கு ஓடினோம். மூச்சுத் திணறிக் கொண்டு யக்ஞசாலையை நாங்கள் நெருங்கியவுடன்

"சர்வே பவந்து சுகின:
சர்வே ஸந்து நிராமயா:
சர்வே பத்ராணி பஸ்யந்து
மா கஸ்சித் துக்க பாக்பவேத்!"

என்ற சுலோகத்தை நான் கேட்டேன்.

ஒரு நிம்மதிப் பெருமூச்சு விட்ட நான், சிவானந்தர் நலமாயிருக்கிறார் என்று உறுதிப் படுத்திக் கொண்டேன். இல்லையென்றால் இந்த சாந்தி மந்திரத்தைத் திரும்பச் சொல்ல ஒருவருக்கும் திராணி இருந்திருக்காது. இத்தகைய சூழ்நிலையில், நிதானம் வேறுயாருக்கும் இருக்காது. பஜனை மண்டபத்தில் பரவியிருந்திருக்கும் குழப் பத்தின் நடுவில் சாந்தி மந்திரத்தைத் திருப்பிச் சொல்லும் மன அமைதி வேறு யாருக்கும் கிட்டி யிருக்காது. இத்தகைய அவல நிகழ்ச்சியை உதறித் தள்ளிவிட்டு, வழக்கம் போல் அமைதியாக, ஒன்றுமே நிகழாதது போல், பதிவான சாந்தி மந்திரத்தைத் திரும்பச் சொல்ல, ஒருவர், யாண்டும் அமைதியாயிருக்கும் ஒரு மாமுனிவராக அமைந்திருக்க வேண்டும்.

பஜனை மண்டபத்திற்கு ஓடினேன். கண்டேன் குருதேவரை! என் உள்ளத்தேயிருந்த பனி விலகியது. "நல்ல வேளை! எப்படி இருந்த போதிலும் அவர் நலமாயிருக்கிறார்" என்ற ஒரே

எண்ணம்தான் இருந்தது. முழுமையான இருள் நீங்கி ஒளியும் இருளும் கலந்த ஒரு விநோத நிலை தோன்றியது. சிவானந்தர் அநேகமாகக் காய மின்றித் தப்பி விட்டார் என்பது மகிழ்ச்சியைக் கொடுத்தது. கோவிந்தனின் செய்கை போன்ற ஒரு செயலை நினைத்துப் பார்க்கக்கூடிய ஒரு மனிதனும் இவ்வுலகில் வாழ்கிறுனே என்பது மாளாத் துயரைக் கொடுக்கிறது. ஆண்டவன் நிச்சயமாக சிவானந்தரைப் பாதுகாக்கிறுர். இன்றைய நிகழ்ச்சிகள் இதை முடிவாக நிரூபித்து விட்டன. சிவானந்தரைத் தாக்குவதற்காகத் கோவிந்தன் காலையில் பதுங்கியிருந்திருக்கிறுன். சுவாமிஜியின் குடிலிலிருந்து பஜனை மண்டபம் வரை யுள்ள நீண்ட வழி முழுவதும் அவர் தனிமையிலே தான் வருவார் என்பதை அவன் நன்கறிவான். அப்பொழுது சிவானந்தர் முற்றிலும் பாதுகாப் பற்ற நிலையில் இருப்பார். தாக்குபவனின் வேலை மிக எளிதாக இருந்திருக்கும். ஆனுல் ... காலை வகுப்பிற்கு சிவானந்தர் பஜனை மண்டபம் வரவில்லை. ஒரு பொழுதும் அவர் காலை வகுப்பிற்கு வரத் தவறுவதில்லை. அவர் வரவில்லையே என்று நாங்கள் ஆச்சரியப்பட்டோம். உடல் நலம் குன்றியிருக்கிறுரோ என்று கூட நான் கொஞ்சம் கவலைப்பட்டேன். அவர் நலமாயிருந்தார். ஆனுல் வரவில்லை. கோவிந்தன் சிவானந்தருக்காகப் பொறுமையில்லாமற் காத்துக் கொண்டு பஜனை மண்டபத்தை ஓரிருமுறை சுற்றி வந்திருக்கிறுன். காலை 9 மணிக்கு படுக்கையில் புரண்டு கொண் டிருக்கும் கோவிந்தன், அதற்கு முன் தன் அறைக்கு வெளியே செல்வது வழக்கமில்லை. அவனது வாழ்க்கையில் ஒரே நாள்தான் அவன் காலை சத் சங்கத்தில் கலந்து கொண்டு அதிகாலையில் நடை பெறும் கீர்த்தனையிலும் பாடினுன். ஆனுல் இது பிசாசளித்த வாய்ப்பாய் அமைந்தது.

சிவானந்தர் இரவில் தலைப்பாகையை எடுத்திருப்பார். ஆனால் இன்று ஏன் எடுக்கவில்லை என்பதை சுவாமிஜியாலேயே விளக்க முடியவில்லை. ஏனோ அவர் எடுக்கவில்லை. அவ்வளவுதான்! ஆனால் நிகழ்ச்சிகள் இச்செய்கையில் மிகவும் பொருள் பொதிந்திருப்பதை நிரூபித்து விட்டன.

முதல்முறை சிவானந்தரின் தலைக்கும் வாசலுக்கும் இடையேயுள்ள தூரத்தைக் கோவிந்தன் சரியாகக் கணக்கிட்டுக் கோடாலியை ஒழுங்குபடுத்திக் கொண்டான். ஆனால் கதவு நீட்டிக் கொண்டிருந்ததை கவனிக்கத் தவறி விட்டான். முதல் தாக்குதல் குறி தப்பிய உடன், அவன் இந்த விஷயத்தை உணர்ந்தான். ஆனால் இலக்கிற்கு அருகில் சென்று விட்ட அவன் கோடாலியை ஒழுங்கு செய்ய மறந்துவிட்டான். எனவே மீண்டும் இலக்கைத் தவறவிட்டான்.

ஆண்டவன் சிவானந்தரைக் காப்பாற்றுகிறார் என்பதை இவை முடிந்த முடிவாக நிரூபிக்கின்றன.

கீர்த்தனைக்குப் பிறகு நாங்கள் அனைவரும் கோவிந்தன் அடைக்கப்பட்டிருந்த அறைக்குச் சென்றோம். அவன் கால் கட்டுக்கள் சீக்கிரம் அவிழ்க்கப்பட்டன. கோவிந்தன் எழுந்து நின்றான். காவலர்கள் அவனுக்கு இருபுறமும் பாதுகாவலாக நின்றனர். கூட்டத்தினர் பார்த்துக் கொண்டிருந்தனர். கூப்பிய கரங்களுடன் சிவானந்தர் நேராக கோவிந்தனிடம் சென்று தலை வணங்கினார். இக்காட்சியைப் போலீஸ் அதிகாரி மிக்க ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். ''கோவிந்த சுவாமிஜி! மேலும் அடிக்க விரும்புகிறீர்களா? நான் இதோ இருக்கிறேன். தயவு செய்து திருப்தியடையும் வரை நீங்கள் அடிக்கலாம்'' என்றார் சிவானந்தர்.

''இல்லை! நான் உங்களை மேலும் தாக்க விரும்பவில்லை. நான் திருப்தியடைந்து விட்டேன்!'' என கோவிந்தன் முணுமுணுத்தான். இக்கூற்று எப்படியாவது தணிக்க வேண்டுமென ஒவ்வொருவரும் முயன்று கொண்டிருந்த கோபத் தீயில் நெய்யை வார்த்தாற் போல் அமைந்தது என்பதை அவர்களுடைய முகம் காட்டியது.

''நான் உங்களுக்கு என்ன தீங்கு செய்தேன்? என்மீது தங்களுக்கு ஏன் இவ்வளவு கோபம்?'' என சிவானந்தர் அப்பொழுது கேட்டார். இக் கேள்விக்குப் பதில் இல்லை.

பிறகு நாங்கள் அனைவரும் பஜனை மண்டபத்திலிருந்து சிவானந்தரின் குடிலுக்குச் சென்றோம்.

''சுவாமிஜி! நான் என்ன செய்யவேண்டும்? இவன் மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யவா?'' என போலீஸ் அதிகாரி வினவினர்.

''வேண்டாம்! வேண்டாம்! முனி-கி-ரேதியிலிருந்து இவனை வெளியேற்றிவிட்டால் போதும்!'' என்றார் சிவானந்தர். சுவாமிஜியின் தெய்வீக அன்பின் ஆழத்தை யாரே அறிவார்! தன்னைக் கொல்லவந்த ஒருவனை அக்கணமே மன்னிக்கத் தயாராக உள்ளார் சிவானந்தர். ஏசுபிரானைத் தவிர வேறு யாராலும் இப்படிச் செய்ய முடியாது.

சிவானந்தர் தன் குடிலை அடைந்தார். இரவின் அந்த அகால வேளையிலும் அன்பர்கள் முடிவிலா அணிகளாக சுவாமிஜியைக் காண வந்துகொண்டிருந்தனர். அக்கம் பக்கத்திலுள்ள அநேகம் ஆடவரும் பெண்டிரும் ஆனந்தம் வருத்தம் இரண்டும் கலந்து கண்ணீர் மல்க சிவானந்தரைத் தரிசித்தனர். ஆனால் புன்னகை ஒளிரும் முகத்துடன் சிவானந்தர் அமர்ந்திருந்தார். வயது முதிர்ந்த

அச்சுதானந்தாஜி தனது ஊன்றுகோலில் தொங்கியபடி சிவானந்தரின் காயத்திற்குச் சிகிச்சை செய்யக் குடிலுக்கு ''ஓடி'' வந்தார்.

## 9-1-1950 சிவானந்தர் நீடுழி வாழ்க:

இரண்டு ஆசிரமவாசிகள் துணையுடன் கோவிந்தன் கிராண்ட் - டிரங் - எக்ஸ்பிரஸில் அவனுடைய சொந்த ஊரான சேலத்திற்கு அனுப்பப்பட வேண்டுமென்று முடிவாகத் தீர்மானிக்கப்பட்டது.

கோவிந்தன் சிறைக்கு அனுப்பப்பட வேண்டு மென்ற பிரேரணையை சிவானந்தர் சிந்திக்கக்கூட மறுத்துவிட்டார். ''வேண்டாம்! வேண்டாம்! எனது பிராரப்தத்தை அவன் நிறைவேற்றினுன். ஆண்டவனின் சித்தம் அடிப்படையில் இல்லாமல் ஏதேனும் நடைபெறும் என்று நீங்கள் கருதுகிறீர் களா? இல்லவே இல்லை. 'இது ஆண்டவனின் சித்தம்' என்று கூறுவதெல்லாம் வெறும் வார்த்தை களா! எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஆண்டவன் கொள்ளைக்காரன், திருடன், கொலைகாரன், வழிப் பறி செய்பவன் எல்லோருள்ளும் உறைகிருன் அல்லவா? கோவிந்தன் மீது நடவடிக்கை எடுக்க நான் அனுமதிக்கவே மாட்டேன். எனது பிராரப் தத்தை இத்தனை சுலபமாகச் செயலாற்றியதற்கு அவனுக்கு நாம் நன்றி செலுத்தவேண்டும்.

இந்தத் தேகத்தைக் கொண்டு இன்னும் கொஞ்சம் சேவை செய்ய வேண்டியிருக்கிறது. எனவேதான் ஆண்டவன் என் உயிரைக் காப்பாற்றி யிருக்கிருன். நான் அச்சேவையைச் செய்து கொண்டேயிருக்க வேண்டும். இந்த நிகழ்ச்சி இதைத்தான் எனக்குக் கோடிட்டுக் காட்டுகிறது''.

காலை 11 மணி அளவில் தத்துவம், கவிதையில் யோகம் பற்றிய சில நூல்களும், வெளியீடுகளும், பழங்களும் எடுத்துக்கொண்டு சிவானந்தா போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றார். தன் கையாலேயே குங்குமம், விபூதி இவற்றை கோவிந்தனின் நெற்றியில் இட்டார். கோவிந்தன் முன் விழுந்து வணங்கினார். விஷ்ணு தத்த சாஸ்திரிஜியையும், பிறரையும் இக்காட்சி பிரமிக்க வைத்தது.

''ஆண்டவன் உனக்கு ஆயுள் ஆரோக்கியம், சாந்தி, செல்வம், பக்தி, நன்னெறி, கைவல்யம் அருளட்டும்'' எனத் தன் கைப்பட எழுதி கையெழுத்திட்டு புஸ்தகங்களை அன்பளிப்பாக அளித்தார். கோவிந்தனுக்கு அஷ்டாக்ஷர மந்திரத்தை உபதேசம் செய்து, ஜபமாலை அளித்து, புஸ்தகங்களையும் கொடுத்துக் கீழ்க்கண்ட புத்திமதியை வழங்கினார்:

''எப்பொழுதும் ஆண்டவனின் நாமத்தை ஜபித்துக் கொண்டிரு! முறையாக தீவிரமாக ஜெபம் செய்! நடந்தவற்றை மறந்துவிடு! மனம் மீண்டும் பழைய கெட்ட தடங்களில் ஓடி இதே போன்ற தவறுகளை நீ மீண்டும் செய்யும்படி ஏற்படாமல் கவனித்துக் கொள். நல்ல ஆன்மீக நூல்களைப் படி! தீயோருடன் இணக்கம் கொள்ளாதே! உன் உள்ளே மறைந்திருக்கும் ஆன்மீகத்துவம், சாதனை மூலம் மலரட்டும். ஆன்மீகம் உன்னுள் இப்பொழுது புதைந்திருக்கிறது. அது உன்னுள் இல்லவேயில்லையென்றால் நீ இங்கு வந்திருக்க மாட்டாய். பிரயாணத்தின் பொழுது, எல்லாச் சௌகர்யங்களையும், வசதிகளையும் உனக்களிக்க புருஷோத்தமன்ஜியும் சாஸ்வத் சுவாமியையும் உன்னுடன் ஆக்ரா வரை வரப் பணித்திருக்கிறேன். ஆக்ராவிலிருந்து உனக்குச் சேலத்திற்கு டிக்கெட் வாங்கிக் கொடுக்கப்படும்.

நீ சேலம் போய்ச் சேர்ந்ததும் தயவு செய்து எனக்கு எழுது. உனது சாதனையைப் பற்றியும் நலம் பற்றியும் அடிக்கடி எனக்கு எழுது! ஆண்டவன் உன்னை ஆசீர்வதிக்கட்டும்!''.

''ஓம் நமோ நாராயணாய!'' என்று பலமுறை சொன்ன சுவாமிஜி, கோவிந்தனையும் இப்புனித மந்திரத்தைச் சொல்ல வைத்தார். சாஸ்வத் சுவாமியுடன் புறப்படுமுன் கோவிந்தனுக்கு, ரசம் முதலிய விசேஷமான சமையல் செய்யப்பட்டு அளிக்கப்பட்டது.

கோவிந்தன் மீது எந்த விதமான நடவடிக்கையும் எடுக்க விரும்பவில்லையென்றும், அவர்கள் இந்த நிகழ்ச்சியை மறந்து விடலாமென்றும், போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு சுவாமிஜி எழுதிக் கொடுத்து விட்டார்கள்.

மாலையில், பஜனை மண்டபத்தில் நடைபெற்ற நன்றி தெரிவிக்கும் விழாவில் சிவானந்தரின் நீண்ட ஆயுளுக்குப் பிரார்த்தனை செய்யப்பட்டது. சுவர்க்காஸ்ரமத்தைச் சேர்ந்த ஓய்வு பெற்ற நீதிபதி கௌரி பிரஸாத் இதற்கு ஏற்பாடு செய்திருந்தார். கூடியிருந்தோர் அனைவரும் ஒருங்கே மஹாமந்திரத்தைப் பாடினர். குழுமி இருந்தோர் அனைவரும் உரக்க ஜெபித்த மஹா மிருத்யுஞ்ஜய மந்திரத்தின் ஒலி அலைகள் மண்டபம் முழுதும் நிறைந்தது. பிறகு சுவாமிஜி தன் கையாலேயே பிரசாதம் வழங்கினார்.

## 17 ஜனவரி 1950 சிவானந்தாவின் ராவல்பிண்டி கீர்த்தன யாத்திரை :

பெங்களூரில் ராணுவத்தில் பணியாற்றும் சுவாமிஜியின் பழம் பெரும் பக்தரும் இளைஞருமான

ஸ்ரீ தேஸ்ராஜ் சசிதேவ் வந்திருக்கிறார். சிவானந்தர் 1933ம் ஆண்டு ராவல்பிண்டிக்கு விஜயம் செய்தது முதலே சுவாமிஜியிடம் சசிதேவ் தொடர்புள்ளவர். நாங்கள் உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது திரு. சசிதேவ் கூறியவை :-

ராவல்பிண்டியில் 1933ல் ஒரு சங்கீர்த்தன சம்மேளனம் நடத்த நாங்கள் முயன்று கொண்டிருந்தோம். அங்கே அப்பொழுதுதான் நான் வாழ்க்கையைத் தொடங்கியிருந்தேன். கீர்த்தனை மண்டலிகள் அவ்வளவு பிரபலமாயில்லை. சம்மேளனம் நடத்தச் சிறிது நிதி வசூலிப்பது கூட மிகக்கஷ்டமாக இருந்தது. இருந்த போதிலும் நாங்கள் இரண்டு மூன்றுபேர்கள் எங்களுடைய ஒரு மாதச் சம்பளத்தை, சம்மேளனம் நடத்த நன் கொடையாக அளிக்கத் தீர்மானித்தோம். ஸ்ரீ சுவாமிஜி மஹராஜ் அவர்களையும், இன்னும் சிலரையும் சம்மேளனத்திற்கு அழைத்தோம். சுவாமிஜி அங்கு வந்தார். ஒரே நாளில் ராவல் பிண்டியிலுள்ள அனைவரின் அன்பு உள்ளங்களிலும் இடம் பெற்றார். ''சங்கீர்த்தனையால் என்ன சாதிக்க முடியும்?'' என்று அறிய அவாக்கொண்டு, சம்மேளன தினத்தன்று உள்ளூர் இளைஞர்கள் பலர் வந்திருந்தனர். சுவாமிஜி ஆங்கிலத்தில் புல்லரிக்கும்படியும், உள்ளுணர்வைத் தூண்டும் வகையிலும் தனது சொற்பொழிவை ஆரம்பித்தார். சுவாமி சொரூபானந்தாஜி இதை இந்தியில் மொழி பெயர்த்தார். பக்தியைப் பற்றியும் சங்கீர்த்தனம் பற்றியும் அவர் ஆற்றிய ஆங்கில உரை அனைவரையும் வெகுவாகக் கவர்ந்தது.

உரை முடிந்த உடனேயே ''சுஜ்ஞ சுஜ்ஞ சுஜ்ஞ கிருஷ்ண ! து கீதா வாலா ஞான சுஜ்ஞ கிருஷ்ண !'' என்று பாட ஆரம்பித்தார்.

கூட்டத்தினர் அனைவரும் ஆனந்த சாம்ராஜ்யத்திற்கே கொண்டு செல்லப்பட்டனர். சில நிமிஷங்களில் சுவாமிஜி நடனமாட ஆரம்பித்து விட்டார். அது காணக் கண்கொள்ளாக் காட்சியாக அமைந்தது. அனைவரும் அவருடன் நடனமாடினர். சற்று நேரத்திற்கு முன் வரை சங்கீர்த்தனத்தில் நம்பிக்கையில்லாதிருந்தவர்களும் கூட பொது இடத்தில் சுவாமிஜியுடன் மேடையில் நடனமாடினர். இது உண்மையிலேயே ஒரு அதிசயமே!

மாதர்கள் மாநாடும் நடைபெற்றது. சுவாமிஜி இங்கும் கீர்த்தனைகளைப் பாடினார். மிகப் பொருத்தமான பாடல் ஒன்றைப் பாடினார் என்பது குறிப்பிடத்தக்கது. அப்பாடல் வருமாறு:

ஹரே ராம ஹரே ராம ராதே
கோவிந்தா
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண ராதே
கோவிந்தா

வீட்டில் பணி செய்யும் போதும்
வெளியில் செயல் புரியும் போதும்
இதயம் ஒன்றி என்றும் சொல்வோம்
(ஹரே)

தன் பாட்டின் பொருளை விளக்கத்தக்க முறையில் நடித்துக்காட்டவும் செய்தார். மாதர்கள் தாங்கள் எந்த வீட்டுப் பணியில் ஈடுபட்டிருந்தாலும் ஆண்டவன் நாமத்தை மனதிற்குள் உச்சரித்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்பது அவரது உபதேசம். அடுத்துத் தாலாட்டு பாடப்பட்டது. அழும் குழந்தையை சமாதானப்படுத்த பஞ்சாபிகளுக்கு ஒரு தனி ராகம் உண்டு. உலகாயத வார்த்தைகளுக்குப் பதில் தெய்வீகப் பதங்களை உபயோகித்து இதே ராகத்தில்

''ஜெய சியா ராம் ஜெய ஜெய சியா ராம்
ஜெய ஜெய சியா ராம் ஜெய சியா ராம்''

என்ற புதுப்பாடலைப் பாடினர். பாடும்பொழுது ஒரு கற்பனைத் தொட்டிலை ஆட்டுவது போன்று கையை அசைத்தார். அருகே இருந்த என் மகனைப் பிடித்து மேடை மீது ஏற்றி அவனுக்குப் பின் நின்று கொண்டு,

''ஜெய கோவிந்தம், ஜெய கோபால, கேசவ
மாதவ, தீனதயாளா!''

என்று பாடி அந்தப் பையனையும் நாட்டியமாடச் செய்தார்.

இவைகள் மூலம் எங்கள் பெண்களுக்கும் குழந்தைகளுக்கும், பயிற்சியளிக்க மிகச் சிறந்த வழியொன்றைக் காட்டினர். அவர் எங்களுக்குப் பயிற்சியளித்ததோடு மட்டும் நிற்காமல், எங்கள் மாதர்களுக்கும் மக்களுக்கும் எப்படிப் பயிற்சியளிக்க வேண்டுமென்றும் கற்றுக் கொடுத்தார். அவரது உபதேசம் முழுமையானதாக இருந்தது. அவரது பயிற்சி பழுதற்றதாக இருந்தது.

சம்மேளனம் மகிழ்ச்சியாகவும், வெற்றிகரமாகவும் நிறைவு பெற்றது. நாங்கள் எதிர்பார்த்ததற்கு மாருக செலவுக்கு மேல் பணம் வசூலிக்க முடிந்தது. மிகப் பணக்கார ஜமீன்தார்கள் எங்களுக்கு உதவ முன்வந்தனர். ஒவ்வொருவரும் வெகுவாகக் கவரப்பட்டனர். இது நாங்கள் நேரில் கண்ட ஒரு பேரதிசயமாகும்.

சுவாமிஜி மிகச் சில உண்மையான மகாத்மாக்களில் ஒருவராக விளங்குவதே இதற்குக் காரணம். மக்களை ஈர்ந்து இயக்கும் ஒரு தெய்வீக காந்த சக்தியை அவர் பெற்றிருக்கிருர். வேறு ஒருவராலும்

இப்படிச் செய்ய முடியாது. மிகப் படித்த, பண்பாடுள்ள மகாத்மாவான சுவாமிஜி அவர்கள், பெரும் கூட்டத்தில் ஆங்கிலத்தில் இடி முழக்கம் செய்வதையும், இனிமையான கீர்த்தனைகள் பாடுவதையும், மெய் மறந்து நடனமாடுவதையும் பகுத்தறிவாளர்கள் காணும் பொழுது சங்கீர்த்தனத்தில் அவர்களின் நம்பிக்கையின்மை பறந்து விடுகிறது. அவர்களும் ஆடலிலும் பாடலிலும் கலந்து கொள்கிறார்கள்.

ராவல்பிண்டியில் சுவாமிஜியைச் சுற்றி பணக்காரர்கள் இருந்தார்கள். ஆனால் ஏழைகளில் பரம ஏழைகளின் நடுவே பழகவே சுவாமிஜி விரும்பினார். தோட்டிகள் தொழிலாளர்கள் இவர்கள் மத்தியில் சகஜமாகப் பழகி அவர்களையும் பாட வைப்பார். இதுவும் அரிதே! ஏனெனில் தற்கால மகாத்மாக்கள் பணம் சம்பாதிக்க விரும்பி, பெரும் ஜமீன்தார்களின் அழைப்பையே ஏற்றுக் கொள்கின்றனர். சுவாமிஜியுடைய நற்பண்புகளிலெல்லாம் அவரைத் தனித்தன்மையுடையவராக்கியது அவரது அப்பழுக்கற்ற நடத்தையே. ராவல்பிண்டியிலும், பஞ்சாபிலும் போலோநாத் என்ற பெயரில் ஒரு சாது அடிக்கடி விஜயம் செய்து கொண்டிருந்தார். ஆனால் மக்கள், சிவானந்தரிடம் இருந்த தூய்மையான நடத்தை அவரிடம் இல்லையென்பதைக் கண்டு கொண்டு, போலோநாத்தைப் பின்பற்றுவதிலிருந்து நழுவிவிட்டார்கள்.

ராவல்பிண்டி விஜயத்தைத் தொடர்ந்து, லாகூர், அமிர்தசரஸ், மற்றும் பஞ்சாப், உத்தரப் பிரதேசம் இவற்றில் பல இடங்களுக்கும் சுவாமிஜி விஜயம் செய்தார்.

சில நாட்களுக்குப் பிறகு, லாகூர் சீடர்கள் சிலர் ஒரு சங்கீர்த்தன சம்மேளனம் ஏற்பாடு செய்து அதற்கு சுவாமிஜியைத் தலைமை ஏற்க வேண்டினர்.

ஆனால் சுவாமிஜி இதற்குச் சம்மதிக்க ஏனோ விரும்ப வில்லை. முதலில் மறுத்துவிட்டார். லாகூர் சீடர் இருவர் ரிஷிகேசம் வந்து சுவாமிஜி அவர்களுடன் கிளம்பினாலொழியத் தாங்கள் திரும்பப் போவதில்லையென்றனர். சிறிது நேரம் சுவாமிஜி விடாப்பிடியாக இருந்தார். லாகூர் சீடர்கள் சாகும்வரை உண்ணாவிரதமிருக்க முடிவு செய்தனர். சுவாமிஜியின் கீர்த்தனைகளைக் கேட்கப் பஞ்சாப் மக்களின் ஆர்வமும், அவர்களுக்கு சுவாமிஜியின் பால் இருந்த அன்பும் அத்தகையதாயிருந்தது. கடைசியாக சுவாமிஜி இசைந்தார். ஆண்டவனின் பக்தர்களுக்கு அவர் அவ்வளவு சலுகைகள் அளித்தார். ஆயுதம் எடுப்பதில்லையென்று தான் பிரதிக்ஞை செய்திருந்தபோதிலும், தனது சீடனின் விருப்பத்திற்காக தேரோட்டிய ஸ்ரீ கிருஷ்ணனின் செயலை இது நமக்கு நினைவூட்டுகிறது.

சுவாமிஜி எப்பொழுதும் விட்டுக் கொடுப்பவரல்லர். அத்துணை மன உறுதியற்றவரல்லர். அதற்கு மாறாக மிகவும் உறுதியுள்ள மகாத்மா அவர். சுவாமிஜி ராவல்பிண்டியிலிருந்து ரிஷிகேசத்திற்கு ஒரு முறை திரும்பிக்கொண்டிருந்தார். நான் அப்பொழுது லாகூரில் இருந்தேன். அவரை லாகூர் ரயில் நிலையத்தில் சந்தித்து, அவர் அங்கு இறங்கி, இரு தினங்கள் எங்களுடன் தங்கியிருக்க வேண்டினேன். ஆனால் அவர் இசையவில்லை. நான் அழக்கூடச் செய்தேன். ஆனால் சிவானந்தர் ரிஷிகேசம் திரும்புவதில் உறுதியாக இருந்தார். ''எனது கீர்த்தனையை நீ அவ்வளவு விரும்பினால் ரிஷிகேசம் வருவதற்கென்ன?'' இந்த வார்த்தைகள் என் காதில் இன்னமும் ரீங்காரம் செய்துகொண்டிருக்கின்றன. அதிலிருந்து நான் அடிக்கடி அவர் தரிசனத்திற்காக ரிஷிகேசம் வருகிறேன்.''

---

# ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அருளிய
# தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் விலை ரூ. | 7-00 |
| * ஞானயோகம் ... ... | 6-00 |
| தர்ம உபதேசம் ... ... | 5-00 |
| யோக சாரம் ... ... | 5-00 |
| குண்டலினி யோகம் ... ... | 5-00 |
| சிறுவர் சிறுமியர்களுக்கு தெய்வீக வாழ்க்கை | 5-00 |
| சிவானந்தரின் சத்சங்க உபதேசங்கள் | 5-00 |
| பிரம்மசர்யத்தின் ரகஸ்யம் ... | 4-00 |
| எண்ணத்தின் ஆற்றல் ... ... | 4-00 |
| பக்தியோகம் ... ... | 4-00 |
| நன்னெறிக் கதைகள் ... ... | 4-00 |
| குரு தத்துவம் ... ... | 3-00 |
| * ஸ்ரீமத் பகவத் கீதை ... ... | 3-00 |
| * வீட்டு வைத்தியம் ... ... | 2-50 |
| * கோபத்தைக் கட்டுப்படுத்தல் ... | 2-00 |
| * உபதேச மஞ்சரி ... ... | 2-00 |
| சிவானந்த வாணி ... ... | 2-00 |
| தெய்வீக குணங்கள் ... ... | 1-50 |
| கவலையிலாப் பெருவாழ்வு (சுவாமி சிதானந்தா) | 5-00 |
| தெய்வீக வாழ்க்கை ,, ,, | 5-00 |
| இராஜயோகச் சொற்பொழிவுகள் ,, | 5-00 |
| சீரிய வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி | 3-00 |
| * சிதானந்தரின் அருட் செய்தி ,, | 3-00 |
| சிதானந்தரின் சத்சங்கஉபதேசங்கள் ,, | 2-00 |
| நித்திய நெறிகள் ,, ,, | 2-00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 4-00 |

புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணமும் சேர்த்து அனுப்புங்கள். V. P. யில் அனுப்புவதில்லை.

ஆஸ்ரமத்தின் மாதாந்திர வெளியீடு :

"சிவானந்தர் அருள்வாக்கு" வருட சந்தா ரூ. 5-00

காரியதரிசி, தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,

இராசிபுரம்-637408, சேலம் Dt.

* 1980 ஆம் ஆண்டு புதிய வெளியீடுகள்